*Ūḻiyaṉ*

*Malar 19, itaḻ 7*

*August 17, 1939*

Record no. 148

REG. NO. M. 3888 16 பக்கங்கள் விலை அணா ஒன்று

சந்தா விகிதம்
உள்நாடு வருடச் சந்தா .... 5—0—0
பர்மா வருடச் சந்தா .... 6—0—0
வெளிநாடு வருடச் சந்தா .... 7—0—0

# ஊழியன்

விளம்பர விகிதம்
அங்குலம் 1-க்கு வாரம் 1-க்கு 0—8—0
... 1—0—0

(தேசிய வாரப் பத்திரிகை)

வியாழன்தோறும் வெளிவருவது

மலர் 19 | காரைக்குடி, பிரமாதி ஞு ஆவணி மீ 1உ வியாழன் (17—8—1939) | இதழ் 7

## கோநகர்

### ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேஸ்பராள் திரிசாரணர் குழுவிழா

பிரமாதி ஞு ஆவணி மீ 5உ (21-8-39) காலை 8 மணிக்கு சமஸ்தான ஸ்கௌட் கமிஷனர் சர் அலெக்ஸாண்டர் டாட்டன்ஹாம் Kt, C. I. E. தலைமையில் கோநகரில் திரிசாரணர் முதல் ஆண்டு நிறைவு விழா நடைபெறும். அதற்கு முதல் நாள் இரவு 7 மணிக்கு தீவட்டம் நடைபெறும்.

## ஸ்ரீ ஸி. வி. ஸி. டி. வி. வெங்கிடாசலம் செட்டியார்

### ரயில்வே ஆலோசனைக் கமிட்டி மெம்பர்

தென்னிந்திய வர்த்தகச் சபையின் பிரதிநிதியாக, கான்பகதூர் ஆதம் ஹாஜி மகமத் சேத் சாகிப்புக்குப் பதிலாக, ஸ்ரீ ஸி. வி. ஸி. டி. வி. வெங்கடாசலம் செட்டியாரை தென்னிந்திய ரயில்வே ஆலோசனைக் கமிட்டி மெம்பராக 2 வருஷங்களுக்குத் தென்னிந்திய வர்த்தகச் சபை தேர்ந்தெடுத்திருக்கிறது.

## எஸ். எம். எஸ். வித்தியாசாலை

12-8-39உ மாலை தலைமையாசிரியர் ஸ்ரீ என். எஸ். வெங்கட்ராமய்யர் தலைமையில் மாணவர் கழகத்துக்கு புதுவருட நிர்வாகஸ்தர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். ஸ்ரீ கே. ஆர். ஸ்ரீனிவாசய்யங்காரைத் தலைவராகவும் ஸ்ரீ சுந்தரராஜய்யங்காரை உபதலைவராகவும் ஸ்ரீ பி. மகமட், வி. ராமச்சந்திரன் ஆகிய இருமாணவர்களைக் காரியதரிசிகளாகவும், ஸ்ரீமான்கள் டி. டி. எஸ். ராஜகோபாலய்யர், எம். பி. சுந்தரேசய்யர், பி. எஸ். கணேசய்யர், வி. சொக்கலிங்கம் பிள்ளை, ஏ. நாச்சியப்பன், ஆர். ராஜகோபாலன், ஆர். அருணாசலம், வி. வெங்கட்ராஜு, ஏ. எஸ். மகமட்நூரு, டி. ராமசாமி முதலியோர் நிர்வாக அங்கத்தினர்களாகவும் தேர்ந்தெடுக்கப் பட்டார்கள்.

## தென்னாற்காடு இடைத் தேர்தல்

சென்னை மேல்சபைக்குத் தென்னாற்காட்டிலே ஒரு இடைத் தேர்தல் நடைபெறப்போகிறது. இத் தேர்தலுக்குத் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவராகிய ஸ்ரீ ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் ஓர் அபேட்சகராக நிற்கின்றார். இவரை எதிர்த்து நான்குபேர் அபேட்சைப் பத்திரம் தாக்கல் செய்திருக்கிறார்கள்.

தென்னாற்காடு மேல்சபை ஓட்டர்கள் இந்த ஸ்தானத்தை அப்படிக் கோட்டை விடமாட்டார்கள். காங்கிரஸ் அபேட்சகர் ஜெயித்துவிடுவார் என்ற திட நம்பிக்கையுடனும் இருந்துவிடக்கூடாது. நால்வரும் நின்று இறுதிவரை போட்டியிடுவார்களானால், காங்கிரஸை ஆதரிக்கும் ஓட்டர்கள் எச்சரிக்கையாகவேயிருக்கவேண்டும்.

தமிழ்நாடு காங்கிரஸ் அபேதவாதக் கட்சிக் காரியதரிசி ஒரு செய்தி விடுத்திருக்கின்றார். இத் தேர்தலில் காங்கிரஸ் அபேதவாதிகள் அனைவரும் ஸ்ரீ ஓமந்தூர் ரெட்டியாரைத்தான் ஆதரிக்க வேண்டுமென்று அதில் கூறியுள்ளார்.

சமீபத்திலே சுபாஷ் போஸின் தனிவிளம்பரக்கட்சி 'பார்வர்டு பிளாக் இந்த இடைத் தேர்தலில் தலையிடப் போகிற தென்று யாரோ ஒருவர் செய்தியைப் பரப்பி, சென்னையில் 'பார்வர்டு பிளாக்' குக்கு ஜீவநாடி எப்படி இருக்கிறதென்று பரீட்சை பார்த்தார். ஆனால் அது உடனே மறுக்கப்பட்டது! ஏன் மறுக்கப்பட்டது?

தென்னாற்காட்டிலே சுய மரியாதைக்காரர்கள் கூச்சல் ஜஸ்டிஸ் கட்சியின் ஆட்சி காலத்தில் அதிகமாயிருந்தது. கடந்த பொதுத் தேர்தல்களில் அடைந்த படுதோல்விக்குப்பின், ஜஸ்டிஸ் கட்சியோ சுயமரியாதைக் கட்சியோ தேர்தல் என்பதை அடியோடு மறந்துவிட்டு, மலாய்நாடு பர்மா போன்ற இடங்களிலிருந்து தங்கள் விபரங்களை விளங்கிக் கொள்ளாதவர்களிடம் ஹிந்தி எதிர்ப்புக்குப் பண வசூல் செய்து ஆனந்தமாய்ச் செலழித்துக்கொண்டிருந்தது. சேலத்து மதுவிலக்கு, விவசாயிகள் நிவாரணம், வரிவிதிப்பு ஆகிய விஷயங்களைப் பற்றி காங்கிரஸ் துவேஷப் பிரசாரத்தை இடைவிடாமல் நடத்தி வந்தது. ஆனால் தென்னாற்காடு இடைத் தேர்தலிலே அதன் சார்பாகப் போட்டியிடுவதற்கு ஒருவர் அகப்பட்டது ஒரு பெரும் பாக்கியந்தான்!

இப்படி ஜஸ்டிஸ் கட்சியின் சார்பாகப் போட்டியிட முன்வந்த பெரியார் ஸ்ரீ ஏ. வி. சீனிவாசலு ரெட்டியார். அவர் இந்தி எதிர்ப்பிலே சிறைக்குச் சென்றுவந்தவரா என்ற விபரந்தெரியாது. ஹிந்தி எதிர்ப்பைக் காட்டிப் பணம் ஏதேனும் வாங்கினரா, அதில் ராமசாமிப் பெரியாருக்குப் பணமுடிப்பு 1001 அம்மன்காசாவது கொடுத்திருக்கிறாரா என்ற உண்மைகளையும் அறிய முடியவில்லை.

ஸ்ரீ டி. கே. நாராயணசாமி நாயுடு என்று ஒருவர் சுயேச்சையாக நிற்கிறார். மனிதர்கள் கூட்டமாகச் சேர்ந்து ஒற்றுமையாக வாழப் போராடி வரும் இக்காலத்தில் சுயேச்சையாகத் தனித்து நிற்கும் ஸ்ரீ நாராயணசாமி நாயுடுக்கு அவர் மட்டும் ஓட்டுப் போட்டுக் கொள்ளட்டும்! ஸ்ரீ நாயுடு இந்த சுயேச்சை நிலைமையை விட்டுக் காங்கிரஸ் அபேட்சகரை ஆதரிப்பதே சிலாக்கியம்.

இன்னேர் அதிசயம் கேட்டீர்களா? சனாதனக் கட்சியின் போரால் ஒரு அட்வகேட் ஸ்ரீ ஸ்ரீநிவாசாரியார் நிற்கத் துணிந்திருக்கிறார். இவர் நல்லவர்; எப்படியாவது சனாதனக் கட்சிக்கு ஆதாரவே கிடையாதென்பதை மெய்ப்பிக்க வந்த அவதார புருஷர் இவர். இவர் தயவு செய்து இத் தேர்தலிலாவது தம்முடைய சனாதனத் தன்மையை (மாறாத நிலைமையை)க் கடைப்பிடிப்பாராக.

5வது அபேட்சகர் விருத்தாசலம் ஸ்ரீ ரெங்கசாமிப்பிள்ளை. தாம் சுயேச்சை என்று கூடச்சொல்லாமல் சும்மா நிற்கிறார்! இவர் ஒன்றுமே சொல்லாமலும் செய்யாமலும் போட்டியிலிருந்து விலகிக் கொண்டால் நல்லது!

## இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க் லிமிடெட் சென்னை

ஜூன் 30உ யோடு முடியும் அரை வருஷத்திய அறிக்கையில் கீழ்க்கண்ட புள்ளி விபரங்கள் தெரியவருகின்றன. கடந்த 6மாதங்களில் செலவு போக ரூ. 46,065—1—6 லாபம் கிடைத்திருக்கிறது. முந்தின கணக்கில் மீந்துள்ள ரூ. 2972—4—2ம் சேர்த்து ரூ. 49,037—5—8 ஆகிறது. இதில் ரூ. 15,993—15—6 இன்வெஸ்டுமெண்டு ரிஸர்வ் கணக்குக்கு மாற்றப்பட்டிருக்கிறது. மொத்தம் ரிஸர்வ் ரூ. 21,682—6—4 ஆகிறது. மீதம் ரூ33,043—6—2 பாங்கு டிபாஸிட்டுகள் ரூ. 97,75,183—2—1. பாங்கின் நல்ல வேலைகளைக் குறித்து கணக்கு வழக்குகளே நன்கு எடுத்துகாட்டுகின்றன.

## புதுக்கோட்டை

### சட்ட சபைத் தேர்தல்

புதுக்கோட்டை சட்ட நிர்மாண சபைத் தேர்தலுக்கு மகாஜன சபை அட்-ஹாக் கமிட்டி 11—8—39உ மாலை அதன் தலைவர் ஸ்ரீ ஆர். வெங்கட்டராம சர்மா தலைமையில் கூடியது. அக்கூட்டத்தில் பின்கண்டமுடிவுகள் செய்யப்பட்டன.

(1) 1939 ஞு அக்டோபர் மீ 2உ நடைபெறப்போகும் சட்டசபைத் தேர்தலுக்கு அபேக்ஷகர்களை மகாஜன சபை அங்கத்தினர்களிலிருந்து குறிப்பிட்டு நிர்வாக சபையாருக்கு சிபார்சு செய்யப்படும்.

(2) சட்டநிர்மாணசபைத் தேர்தலுக்கு அபேக்ஷகர்களாக நிற்க முன்வருபவர்கள் அட்—ஹாக் கமிட்டியாரால் வெளியிடப்பட்டிருக்கும் உறுதிமொழி அப்ளிகேஷன் பாரத்தில் கையெழுத்துச் செய்து அப்பாரத்துடன் பிரவேசக்கட்டணம் ரூ 5 (ரூபாய் ஐந்து மட்டும்) அனுப்பிவைக்க வேண்டியது.

## மாய்ந்த நினைவு

காவி

இலங்கையில் கணபதி ஒரு பத்திரிகாலயத்தில் உதவி ஆசிரியராக நியமிக்கப்பட்டான். அவன் அப்போதுதான் பி. ஏ. பரீட்சையில் தேறினன். ஆரம்பமுதல் அவன் எந்த வகுப்பிலும் பரீட்சையில்முதலாவதாகவே தேறிவந்தவன். பி. ஏ. பரீட்சையிலும் அப்படித்தான் தேர்ச்சி பெற்ருன். ஆகையால் அவனுடைய மனம் அவன் கொண்டிருந்த எண்ணங்களுக்கு மேலும் மேலும் ஊக்கத்தையே கொடுத்துவந்தது.

உதவிப் பத்திராசிரியராக நியமிக்கப்பட்டதும், தேசம் முழுதும் தன் கையிலே ஒப்படைக்கப்பட்டதாக கணபதி உணர்ந்தான். நியாயமான வழியில் பொதுமக்களுக்கு உண்மையான உணர்ச்சிகளை ஊட்டி, தேசம் விரைவில் விடுதலையாகிற வழியைத் தேட வேண்டியதுதான் தன் வேலை என்று அவன் நினைத்தான். இதற்காகவே தனக்கு மாதம் நாற்பது ரூபாய் செலவுக்குத் தரப்படுகிறது என்றும் உணர்ந்தான். அப்பணத்தை அவன் 'சம்பளம், கூலி' என்றபடி இழிவாகக் கருதவில்லை!

கணபதி, அரசியல் தலைவர்களுக்கு வைத்திருந்த மதிப்பே அலாதியாயிருந்தது. அவன் தலைவர்களுடைய தனிப்பட்ட வாழ்க்கையைப்பற்றி உண்மையான விபரங்களையறிந்து அவைகளுக்குத் தகுந்தாற்போல உயர்வு தாழ்வாக எண்ணினன்.

கணபதி வேலையை ஒப்புக்கொண்டது முதல் 'தேச பக்தி'யின் செல்வாக்கு அதிகரித்தது. அறிவும் வீரமும் நிறைந்த கட்டுரைகள் பல கணபதியின் பேரால் வெளிவந்துகொண்டிருந்தன. மக்கள் 'தேச பக்தி'யில் தனியார்வம் வைத்தனர். மற்றும் இலங்கையின் அரசியல் இந்தியாவுக்கு ஆதரவாய்த்தானிருக்கவேண்டுமென்று அவன் அடிக்கடி வற்புறுத்தி எழுதினன். இதனல் இலங்கைவாழ் இந்தியர்கள் 'தேச பக்தி' பத்திரிகையைத் திடீரெனப் பெரிதும் ஆதரிக்கலாயினர்.

'தேசபக்தி'யில் ஏதேனும் ஒரு புரட்சிகரமான செய்தி தினந்தோறும் வெளிவந்து கொண்டிருக்கும். என்ருலும் அப்போது மந்திரியாயிருந்த ஸ்ரீ செந்திலகத்தைப்பற்றி அன்று வெளிவந்த கட்டுரை எல்லோரையும் தூக்கி வாரிப்போட்டது. அதைப் படித்தவர்கள் நடு நடுங்கிப் போய் விட்டார்கள். குடும்பஸ்தராகிய ஸ்ரீ செந்திலகம், ஒரு தமிழப்பெண்ணுடன் தொடர்பு வைத்துக் கொண்டிருப்பதாக அதில் குறிப்பிடப்பட்டிருந்தது. மற்றும் அப் பெண்ணைப்பற்றிப் பல இழிவான விபரங்களும் தரப்பட்டிருந்தன.

'தேசபக்தி' பத்திரிகையின் ஆசிரியர் நல்ல கனவான். அவர் கணபதியிடம் சகல உரிமைகளையும் ஒப்படைத்திருந்தார். கணபதியின் எழுத்தும், அறிவும், உண்மையும், ஒழுக்கமும் அவருக்குப் பிடித்திருந்தது. மந்திரியைப்பற்றி 'அவதூருன' விபரங்கள் வெளிவந்துள்ளதாக ஊரார் ஒரே பேச்சாகப் பேசிக் கொண்டிருந்தபோது கூட அவர் அதைச் சட்டை செய்யவில்லை. ஆனல் 4 ம் நாள் 'தேசபக்தி' பத்திரிகையின் சொந்தக்காரரர் என்றதோரணையில் மந்திரியிடமிருந்து ஒரு கவர் கிடைத்தது. அக் கடிதத்தைக் கண்டு ஒரு மணி நேரம் ஏதோ ஆழ்ந்த சிந்தனையில் இருந்தார். இரண்டு சொட்டுக் கண்ணீர் அக் கடிதத்தின் மீது விழுந்து சப்தமிட்டன. பிறகு ஆசிரியர் மணியடித்தார்.

"ஏ ராமு! மிஸ்டர் கணபதியைக் கூப்பிடு"

என்றுமில்லாதபடி ஆசிரியர் உதவியாசிரியரைக் கூப்பிட்டனுப்பியது ராமுவுக்கு அதிசயமாயிருந்தது. அவன் ஏதோ ஒரு முக்கியமான விஷயமாயிருக்க வேண்டுமெனவும், அது சந்தோஷச் செய்தியாயிருக்கக் கூடுமா, துக்கச் செய்தியா எனவும் எண்ணிக் கொண்டே கணபதியின் மேஜை முன்னேபோய் நின்ருன்.

"யஜமான்!"

"என்ன ராமு"

"பெரிய யஜமான் உங்களை வரச் சொல்ருங்க எஜமான்"

"யாரு, பெரிய யஜமானு?"

"ஆமாங்க எஜமான்"

"என்னையா?"

"ஆமாங்க, உங்களைத்தானுங்க. ஏதோ முக்கியமான விஷயம்போலேயிருக்கு"

ராமு வெளியிலிருந்தபடியே ஆசிரியரும் உதவியாசிரியரும் பேசிக்கொண்டிருந்ததைக் கேட்டுக்கொண்டிருந்தான். அவர்கள் ஆங்கிலத்திலே பேசிக்கொண்டிருந்தது அவனுக்குப் புரியவில்லை!

கணபதி வெளியில் வந்தான். நேரே தன் அறைநோக்கிச் சென்ருன். அவனுக்குப் பின்னல் காதோரமாகத் தன் வாயை வைத்துக்கொண்டு ராமு "என்னுங்க எஜமான்?" என்ருன்.

ஏதோ சிந்தனையில் மூழ்கியிருந்த கணபதி திரும்பிப் பார்த்து ராமுவைக் கண்டு புன்முறுவலாய்ச் சிரித்தான். கணபதி ராமுவைப்பற்றி என்ன நினைத்திருந்தானே!

கணபதி தன் சொந்தக் கடிதங்களையெல்லாம் ஆராய்ந்து எடுத்துக்கொண்டு, காரியாலயத்தின் படிக்கட்டுக்களை விட்டிறங்கும்போது ராமு முழங்கால்களைக் கட்டிக்கொண்டு, இரு கைகளாலும் தலையைப் பிடித்துக் கொண்டேயிருந்தான். கடைசிப் படிக்கட்டைவிட்டு கணபதி இறங்கும்போது திரும்பிப்பார்த்தான். தன்தலைமீதிருந்த கைகள் இரண்டையும் ராமு எடுத்து ஏந்திக் காட்டினதை அரை விநாடிகூடக் கணபதியால் பார்க்கச் சகிக்கவில்லை.

• •

ரெங்காவின் பங்களாவுக்கு முன்னல் அந்த மோட்டார் கார் இரண்டு மூன்று நாட்களாகத் தென்படாதிருந்தது. இதுரெத்தினம், ஷண்முகம்,நாச்சாள், சுப்பு போன்றவர்களுக்குப் பெருத்த ஆச்சரியமாயிருந்தது.

ரெத்தினத்தின் வீடு அரட்டையடிப்பதற்கு மிகச் சௌகரியமான இடம். மற்றும் அவளிடம் அசல் சிவபுரிப் புகையிலையிருக்கும். மற்ற விஷயங்களில் ரெத்தினம் சிறிது செட்டாயிருந்தாலும், வந்தவர்களிடம் தினசரிப் பத்திரிகை மாதிரி புதிய ஆச்சரியமான செய்திகளைச் சொல்லுவதிலும், வேண்டியபோது வெற்றிலை பாக்கு சிவபுரிப் புகையிலை தருவதிலும் அவள் சிறிதும் யோசிக்கமாட்டாள்.

நாச்சாள் பெரிய புகையிலைப் பிசாசு என்று ரெத்தினத்துக்குத் தெரியும். இந்த சாக்கை வைத்து ரெத்தினம் தன் வேலைக்காரியை யனுப்பி உடனே நாச்சாளைக் கூட்டிக்கொண்டு வரச் சொன்னுள். நாச்சாள் வருவதாயிருந்தால்ஷண்முகமில்லாமல் வரமாட்டாள் என்றும் ரெத்தினத்துக்குத் தெரியும்.

இப்படி ஷண்முகத்தையும் நாச்சாளையும் ரெத்தினம் வருவித்ததற்குக் காரணம் அவளிடம் ஒரு முக்கிய செய்தி இருந்ததுதான். அதைப்பற்றி இவர்கள் இருவரிடமும் பேசித் தன் ஆவலைத் தீர்த்துக்கொள்ள வேண்டுமென்று அவள் பதை பதைத்துக் கொண்டிருந்தாள்!

சினிமா, உத்சவம், அரட்டை முதலானகாரியங்களுக்குஒருத்தியை வரச் சொல்லிவிட்டால் போதும். குறைந்தது 3 பெண்களும் நான்கு குழந்தைகளுமாவது வந்து விடுவார்கள். ஷண்முகமும் நாச்சாளும் பக்கத்துவீட்டு சுப்புவையும் கூட்டிக்கொண்டார்கள். தங்களுடன் அழைத்துக்கொண்டு செல்ல குழந்தைகளில்லாததால் தங்கள் தங்கள் வேலைக்காரிகள் சகிதமாய்ப் புறப்பட்டனர்!

ரெத்தினத்தின் வீடு அரட்டையடிப்பதற்கு மிக வசதியான இடம் என்று சொன்னேன் அல்லவா? அவள் நாச்சாளைக் கூட்டிவர வேலைக்காரியை யனுப்பும்போதே, அவளிடம் 3 கவுளி வெற்றிலையும் 2 அணு அசோகா பாக்கும் வாங்கிவரச் சொல்லியிருந்தாள். அசோகா பாக்கு $1\frac{1}{2}$ அணுவுக்கு வாங்கினல் போதுமென்று சொல்லி, மீதி அரையணுவுக்கு சீவல் பாக்கு தனக்காக வாங்கி வரும்படிச் செய்து விட்டாள் சுப்பு. ரெத்தினம் இதற்காகக் கோபித்துக் கொள்ள மாட்டாள் என்று வேலைக்காரிக்கும் தெரியும். ஆகையால் அதன்படியே செய்யப்பட்டது.

"வா சுப்பு, நீ கூட என்னுடைய குடிசைக் குட்டிச் சுவரைத் தேடி வந்து விட்டாயா?" என்று புதிதாக வந்த சுப்புவை ரெத்தினம் வரவேற்ருள்.

"என்ன அக்கா, வரும்போதே 'கழுதை' என்கிருயே. குட்டிச் சுவரைத்தேடி அதுதானே வரும்." என்ருள் சுப்பு.

"அப்படிப் போடு, அப்படிப்போடு. எங்களை யெல்லாம் வாயடைக்கிறதுபோல சுப்புவிடம் செல்லாது" என்றனர் ஷண்முகமும் நாச்சாவும்.

எல்லோரும் இப்படியே சிறிது அரட்டையடித்துக் கொண்டிருந்தார்கள். நாச்சாள் சிவபுரிப் புகையிலையைக் கருமித்தனம் செய்யாமல் உபயோகித்துக் கொண்டுவந்தாள்.

"ஏண்டி நாச்சா, புதிதாக அந்த பங்களாவுக்கு ஒருத்திவந்திருக்கிருளே தெரியுமா?"

"ஓ! எனக்குத் தெரியும். பிச்சடா போட்டுக்கொண்டு வேணி கட்டியிருப்பாளே, டோலக்குக்காரி. அவள் தானே?" என்ருள் சுப்பு.

"நீ கூட அந்த டோலக்குக்காரி ரெங்காவைப் பார்த்து விட்டாயா?" என்ருள் நாச்சாள், இடதுபுறவாயோரமாயிருந்த புகையிலையை வலதுபுற ஓரமாய் ஒதுக்கிகொண்டே.

ரெத்தினம் மேலும்சொல்லலானுள்,

"இன்று காலை 7மணிக்கு என்னை அவள் பங்களாவுக்கு வரும்படி இங்கு வந்து ஒரு காலில் நின்ருள். நான் எவ்வளவோ சாக்குப் போக்குச் சொல்லிப்பார்த்தேன். அவள் கேட்கமாட்டேன் என்று விட்டாள். சரி யென்று புறப்பட்டேன்"

"அவள் 40 ரூபாய் வாடகை கொடுத்துப் பங்களாவில் குடியிருப்பவள் அல்லவா, போகவேண்டியது தான்" என்ருள் ஷண்முகம் சிறிது நையாண்டியுடன். உடனே நாச்சா,

"ஷண்முகத்துக்கு என்ன இருந்தாலும் அவசரம் ஜாஸ்தி. அக்காளிடம் ரெங்காவின் கதையை முழுதும் கேட்பதற்குள்ளாக...."

"தப்பிதம், தப்பிதம். இதோ போட்டுக் கொண்டேன்" என்று சொல்லிக்கொண்டு ஷண்முகம் தன் கன்னங்களில் இரண்டு அறை பளிச் பளிச் சென்று போட்டுக் கொண்டாள்.

"சரி. நீங்கள் ரெங்காவின் பங்களாவுக்குப் போனீர்கள். காபியும் பலகாரமும் சாப்பிடச் சொன்னுள். நீங்கள் வேண்டாமென்றீர்கள். பிறகு சாப்பிட்டீர்கள். அதன் பிறகு சொல்லுங்கள்" என்ருள் சுப்பு!

திடீரென்று வாசலில் கார் வந்து நின்ற சப்தம் கேட்டு எல்லோரும் வாரிச் சுருட்டி எழுந்தனர். அனைவரும் யாரோ ஆடவன் என எதிர்பார்த்து ஏமாந்தனர். வந்தவள் ஒரு பெண். நல்ல தோற்றம். பார்த்த மாத்திரத்திலேயே நன்ருகப் படித்து, நன்ருக வாழ்ந்த குடும்பத்திலே பிறந்தவள் எனத் தெரிந்தது.

ரெத்தினம் சாய்வு நாற்காலியைக் காட்டி 'உட்கார் ரெங்கா' என்று அமரச் சொன்னுள். 'சும்மா கீழேயே உட்காருவோம்' என்று சொல்லிக் கொண்டே, ரெங்கா தன்னுடைய இரண்டுகைகளாலும் ஷண்முகத்தையும் சுப்புவையும் கீழேஇழுத்து உட்காரவைத்தாள்.

ரெங்காவின் குணவிசேஷங்களை யறியாமலே இவர்கள் கொண்டிருந்த பழயபொருமைக்குணம், அவளுடைய சிரித்தமுகத்தையும் அளவளாவுந் தன்மையையும் கண்டதும் மாயமாய் மறைந்தது.

ஷண்முகம், தனியாய்க் கிடந்த சுண்ணும்பு டப்பியை வெற்றிலைப் பாக்குத் தட்டில் வைத்து ரெங்காவின் அருகில் மரியாதையாகத் தள்ளிவைத்தாள்.

எல்லோரும் ரெங்காவின் முகத்தையே பார்த்தனர். ரெங்கா ரெத்தினத்திடம் தனித்துப்பேச மிக ஆவலோடு வந்திருந்தாள். புதிதாகப்

15-ம் பக்கம் பார்க்க





# சர்வம் சர்வாதிகாரிகள் மயம்!

## 60 கோடி மக்கள் அவர்களுக்கு அடிமைகள்

### பல்வேறு நாடுகளும் அரசியல் நிர்வாகமும்

சர்வாதிகாரம் என்ருல், பொது மக்களிற் பலர், ஹிட்லருடைய ஆட்சி அல்லது முசோலினியின் தனியதிகாரம் என்று நினைத்துக் கொண்டிருக்கிருர்கள். ஆனல், மிகச் செல்வாக்கிலுள்ள இந்த இருவரைத் தவிர இன்னும் பல நாடுகளில் சர்வாதிகாரம் பரவி வருகின்றது.

இன்றைக்குப் பார்த்தால் உலக ஜனத் தொகையில் 201 கோடி மக்களில் சுமார் 60 கோடி மக்கள் ஏதேனும் ஒருவிதமான சர்வாதிகாரத்துக்கடியில்தான் வாழ்ந்து வருகின்றனர். தங்கள் ஆட்சியில் எவ்விதப் பொறுப்பும் வகிக்காத காலனிகளில் வாழும் ஜனங்களை இக் கணக்கில் சேர்த்துக் கொள்ளப்படவில்லை.

**பொலீவியா (தென் அமெரிக்கா)**

சர்வாதிகாரக் கோஷ்டியில் சமீபத்தில் சேர்ந்திருக்கின்ற நாடு பொலீவியா.

சென்ற ஏப்ரல் மாதத்தில் ஜர்மானியப் பரம்பரையைச் சேர்ந்த பிரஸிடெண்ட் பஸ்க் பொலீவியாவைச் சர்வாதிகார நாடாக்கி, பார்லிமெண்டைக் கலைத்துவிட்டு, தனியதிகாரஞ் செலுத்த வாரம்பித்தார். இவர் பாரகுவே மீது தொடுக்கப்பட்ட கிரான் சாகோ யுத்தத்தில் கியாதி பெற்ற ஒரு இராணுவ உத்தியோகஸ்தராயிருந்தவர்.

இப்படி பொலீவியா சர்வாதிகார ஆட்சிக்கு இரையானதற்கு, அங்கு தொழிலாளர்கள் தொல்லைப்பட்டுக் கொண்டிருந்ததும் ஒரு காரணம் ஆகும். என்ருலும் கடந்த சில ஆண்டுகளாக இராணுவத்தைச் சேர்ந்த ஒரு கூட்டமே அங்கு அமுல் நடத்திக் கொண்டு வந்தது.

தெற்கேயும் மத்தியிலுமுள்ள அமெரிக்க ரிபப்ளிக் (குடியரசு) நாடுகளிலே, பாதிக்குமேற்பட்ட நாடுகள், அதிகமாகவோ சர்வாதிகாரத்துக்குட்பட்டுத்தான் இருக்கின்றன. ஆனல் சர்வாதிகார உச்சாட்டத்தை ஐரோப்பாவிலேதான் நன்ருய்க் காணமுடிகிறது.

சுமார் 50 கோடி ஜனங்களுக்கும் குறைவாக வுள்ள ஐரோப்பாவில் சுமார் $39\frac{1}{2}$ கோடிக்குக் குறையாத ஜனங்கள் ஒன்றில்லாவிடில் மற்ருெரு விதமான சர்வாதிகார ஆட்சிக்கு அடங்கியிருக்கின்றனர்.

**சர்வாதிகாரத்தில் 3 விதம்**

சர்வாதிகாரத்தை முக்கியமாக 3 விதமாய்ப் பிரிக்கலாம்.

ஹிட்லர் முசோலினியைப் போல, தங்களுடைய சொந்த திட்டத்தாலும் தனிப்பட்ட செல்வாக்காலும் ஆட்சிக்கு வந்தவர்கள் முதலாவது விதம். மற்ற நாடுகளில் இவர்களைப் பின்பற்றி அதிகாரத்துக்கு வருகின்றவர் உண்டு. பிரேஸில் நாட்டுக்குத் தலைவராக இருக்குவரும் பிரஸிடெண்ட் வர்காஸ் ஒரு நல்ல உதாரணம் ஆவார்.

**பிரேஸில் (தென் அமெரிக்கா)**

பிரேஸில் ஒரு குடியரசு நாடு. 1930-ம் ஆண்டில் ஏற்பட்ட ஒரு குழப்பத்தில் வர்காஸ் செல்வாக்கடைந்து, தற்காலிகமாக நான்கு வருஷங்களுக்கு அதிகாரம் வகித்தார். 1934-ல் அவர் மீண்டும் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

1937ம் ஆண்டில் வர்காஸ் திடீரென்று குடியரசு அரசியல் திட்டத்துக்கு அப்படியே முட்டுக் கட்டை போட்டு, பிரேஸிலினுடைய நன்மையைக் கோரி சர்வாதிகாரத் தலைவர் ஸ்தானத்தை ஏற்படுத்தினர்.

இப்படியாக வர்காஸின் பிரஸிடெண்ட் பதவி காலவரையில்லாமல் நீடித்துக் கொண்டே வருகிறது. எல்லா அரசியல் கட்சிகளும் மறைந்து ஒழிந்தன. பத்து லட்சம் பேர்களடங்கிய பாஸிஸ ஸ்தாபனம் கூட செத்துப்போயிற்று. ருஷ்யாவுக்கு அடுத்தாற்போல ஐரோப்பாவில் மிகப் பெரிய நாடாக விளங்கும் பிரேஸில் நாட்டிலிருந்த சகல எதிர்ப்புகளும் ஒடுக்கப்பட்டன.

**போர்ச்சுகல்**

போர்ச்சுகல் நாட்டிலும் பிரேஸிலைப்போலவே சர்வாதிகாரம் ஏற்பட்டது.

டாக்டர் சலாசார் என்பவர் ஒருதலைவருக்கு உட்பட்ட பிரதம மந்திரியாக விளங்கிய போதிலும், அவர் ஒரு சர்வாதிகாரிதான்.

மந்திரி சபையில் மொத்தம் 12பதவிகள். இவைகளில் 4பதவிகளை டாக்டர் சாலாசாரே வகித்துக்கொண்டு, 6வருடங்களுக்கு முன்பு, பிரஸிடெண்டுக்கு மட்டும் உட்பட்ட ஒரு புதிய சர்க்கார் அரசியல் திட்டத்தை அவர் புகுத்தினர். பார்லிமெண்ட் சபை என்று ஒன்று உண்டு. அதில் 90 ஸ்தாபனங்கள். இந்த ஸ்தானங்களுக்கு தன்னை யார் யார் ஆதரிப்பார்களோ அவர்களைத்தான் டாக்டர் சாலாசார் தேர்ந்தெடுத்துக்கொள்வார்.

போர்ச்சுகல் நாட்டு அரசியல் மிகவும் மோசமாயிருந்த சமயத்தில் டாக்டர் சலாசார் ஒரு வழி சொல்லிக் கொடுத்தார். மற்றும் அவர் மிகச் செல்வாக்கு பொருந்தியவராயிருந்தார். தனிப்பப்பட்ட முறையில் அவர் ஒரு ஏகாங்கி. அவருடைய முயற்சியாலேயே போர்ச்சுகல் புத்துயிர் பெற்றது. சீரழிந்து கிடந்த தேசப் பொருளாதாரம் உருப்படியான நிலைமையைப் பெற்றது. தேசத் தொழில்களும் விருத்தியடைந்தன. இப்படியெல்லாம் செய்தும் கூட, வயது முதிர்ந்தவர்களிற் பாதிப்பேர் இன்னும் கல்வியறிவு பெற்ருர்களில்லை. என்ருலும் டாக்டர் சலாசாரின் சர்வாதிகார ஆட்சி நல்லதென்றே கருதப்படுகிறது.

**2-வது விதம்**

சர்வாதிகாரத்தில் 2-வது விதம், இப்போது ஜப்பானில் நடந்து வருவதைப் போன்றது. இதில் சக்ரவர்த்தியே சர்வாதிகாரம் செலுத்திகிருர். இராணுவம் அதை நடத்தி வைக்கிறது. 'பார்லிமெண்டு' போலவுள்ள ஜப்பானிய சபை ஜனநாயக முறையைக் கொண்டதாயினும், சர்க்கார் அதிகாரிகளிடம் அதற்கு எவ்வித அதிகாரமும் கிடையாது.

இராணுவத்திடம் தனிப்பட்ட உள்ளன்பு வைத்திருப்பதும், சக்ரவர்த்தியிடம் கடவுளுக்குரிய பக்தியைச் செலுத்துவதும், ஜனநாயகத்தைப்பற்றி ஒரு சிறிதும் அறியாத நிலையிலிருப்பதும், வர்த்தகத் தொழிலில்உலகத்திலேஉச்ச ஸ்தானத்தில் நிற்கும் ஜப்பானைப் பண்டைய அநாகரிக நிலைமையில் வைத்துக் கோண்டிருக்கின்றன.

**3 வது விதம்**

3 வது விதத்தைச் சேர்ந்த சர்வாதிகார நாடுகள்தான் இப்போது எங்கு பார்த்தாலும் அதிகமாய்க் காணப்படுகின்றன. அதாவது இருந்தாற்போலிருந்து, திடீரென்று சர்வாதிகாரத் திட்டம் ஏற்படுகிற நாடுகள். ருமேனியா, போலந்து, பல்கேரியா ஆகிய நாடுகள் இந்த 3 ம் ரகத்தைச் சேர்ந்தவை. இந்நாடுகள் ஒவ்வொன்றிலும், பார்லிமெண்டு நிர்வாகம் காலவரையின்றி ஒடுக்கப்பட்டு தேசத்தின் சர்க்கார் பொறுப்பை ஒரு சில மனிதர்களிடம் ஒப்படைப்பதாகும்.

தனிச் சர்வாதிகாரியாக விளங்கிக் கொண்டிருக்கும் மன்னர், ருமேனியா தேசத்து கரோல் மன்னர் ஒருவர்தான். இவ் வருட ஆரம்பத்தில், தேசப் புனருத்தாரண முன்னணியை கரோல் மன்னர் ஸ்தாபித்தார். முழுதும் ஒரே கட்சியைச் சேர்ந்தவர்கள்தான்.

இம் முன்னணியில் இருப்பவர்கள் அனைவரும் தனி உடை, தனி சல்யூட் தனி தொழிலாளர் சங்கங்கள் முதலியவற்றை கைக் கொண்டவர்கள். ருமேனியாவுக்கு நேரிடக்கூடிய, அல்லது நேருகின்ற இடையூறுகளைத் தடுப்பதற்காக இப்படிப்பட்ட சர்வாதிகாரத்தை அவர் ஸ்தாபித்துக்கொண்டார்.

கரோல் மன்னர் புரிகின்ற சர்வாதிகாரம் சகிக்க முடியாத ஒன்றல்ல. யூதர்களைத் தவிர (!) சகலர்க்கும் மத சுதந்திரமுண்டு, இந்த சர்வாதிகார முறை தற்காலிகமானதென்று விளக்கமாகச் சொலலப்பட்டிருக்கிறது. எனவே மக்களுக்குள் துவேஷம் ஏற்படவில்லை.

என்ருலும் தேச முன்னணி சர்க்கார், முன் பிருந்த மனக்கசப்புகளை நீக்கி ருஷ்யாவுடன் நெருங்கிய நேசப் பான்மை வைத்துக்கொள்ள முயன்று வருகிறது.

**துருக்கி**

துருக்கி சொல்லளவில் மட்டுக்தான் மாறுபட்டிருக்கிறதேயல்லாமல், அது குடியரசுச் சர்வாதிகாரம் (!) பெற்ற ஒரு நாடு தான். தேசிய அஸெம்பிளி என்று பொதுஜன வாக்குமூலம் தேர்க்தெடுக்கப்பெற்ற ஒரு சபையும் பிரஸிடெண்ட் ஒருவரும் துருக்கியில் சர்வாதிகாரம் புரிந்து வருகிருர்கள். அங்கு எதிர்கட்சி கிடையாது.

சில ஆண்டுகளுக்கு முன்னுல், காலஞ்சென்ற அட்டாடர்க் பரீட் சார்த்தமாக ஒரு எதிர்க்கட்சியை உண்டாக்கிப் பார்த்தார் ஆனல், அரசியல் அனுபவம் பெருத துருக்கி இதற்கு லாயக்கற்றதெனக்கண்டார். 12 மாத பரீட்சைக்குப் பின், எதிர்க்கட்சியைப் அவர் கலைத்து விட்டார்.

கடைசியில் துருக்கி ஒரு சர்வாதிகார நாடாகத்தான் திகழுமென்பது உண்மை. இப்போதுகூட அதன் நிலைமை பிற்போக்கானதாயில்லை.

**போலந்து**

போலந்தின் பிரஸிடெண்டும் இன்னோர் குடியரசுச் சர்வாதிகாரம் வாய்ந்தவர்தான். அவருக்கு ஏராளமான அதிகாரமிருக்கிறது, இராணுவம் பக்க பலமாய் நிற்கிறது. மார்ஷல் ஸ்மிக்ளி ரிட்ஸ் என்பவர்தான் போலந்தின் உண்மையான சர்வாதிகாரி. அவரும் கர்னல் பெக்கும் சேர்ந்து போலந்தின் எதிர்காலத்தை நிர்ணயித்துக் கொண்டு வருகின்றனர்.

**மெக்ஸிகோ**

மெக்ஸிகோவில் இராணுவச் சர்வாதிகாரந்தான் நடக்கின்றது. ஜெனரல் கார்டினுஸ் என்பவர், மத்தியஅமெரிக்காவிலும் தென் அமெரிக்காவிலும் சர்வ சாதாரணமாக அடிக்கடி நிகழும் இராணுவக் குழப்பங்கள் ஒன்றில் திடீரென்று செல்வாக்கடைந்தார். உடனே மிகத் தீவிரமாக பாஸிஸத்துக்கு எதிரிடையான காரியங்களைச் செய்தார்.

மெக்ஸிகோ, சிலி, எக்குவடார், நீர்ரோவர் குடியரசாகிய ஹெயிடி ஆகிய நாடுகள் தீவிர போக்கில் உள்ளவை. 17 நாடுகளில் இவை போக மீத முள்ளவை. பற்பல தரத்தில் சர்வாதிகாரம் கொண்டவை. சால்வடார் என்ற நாடு இவற்றுள் பிரதானமானது.

**பெரு (தென் அமெரிக்கா)**

3 வருஷங்களுக்கு முன், பெருவின் பிரஸிடெண்டுக்கு பொதுத் தேர்தலில் பாதகமான முடிவு ஏற்பட்டது. ஆனல் பிறகு சர்வாதிகாரம் ஓட்டு மூலம் வழங்கப்பட்டது. இத் தேசத்தின் போக்கு பூராவும் தீவிரப் பாஸிஸத் தன்மை கொண்டது.

ஆதலின், பரம்பரையாகக் குடியரசுத் தன்மைகொண்ட அமெரிக்காவில் சர்வாதிகாரிகள் 'பிரஸிடெண்டு' என்கிற பசுத்தோலுடன் ஆட்சி புரிகிருர்கள். மற்ற ஜனநாயக இடங்களிலே மன்னர்களே ஆட்சி நடத்துகிருர்கள்.

ஹிட்லர்கூட ரீச்பிரஸிடெண்டாக இருந்து கொண்டுதான் உலகத்திலேயே பெருஞ்சர்வாதிகாரியாக விளங்குகிருர். 1933 ம் வருஷத்தில் அவருடைய கட்சி நிறைவேற்றிய ஒரு சட்டம் ஆட்சி புரிவதாகத்தான் கியதி இருந்து கொண்டிருக்கிறது.

# வரியைக் கூட்ட ஊர் நிலை சரியில்லை

## வயது முதிர்ந்த ஹரிஜனங்களுக்குப் பாடசாலை!

### காரைக்குடி நகரசபை நடவடிக்கை

காரைக்குடி நகரசபையின் சாதாரணக்கூட்டமொன்று சேர்மன் ஸ்ரீ ராய. சொக்கலிங்கன் தலைமையில் நடந்தது. தலைவர் உள்பட 11 கவுன்சிலர்கள் வந்திருந்தார்கள்.

ஸ்ரீ பழ. நாச்சியப்பன் கேட்ட கேள்விகளுக்குப் பதிலளிக்கையில், சாக்கடைத் தண்ணீரை வண்டிகளில் எடுத்துக்கொண்டுபோய் டவுனுக்குள் வீடுகளுக்குப் பக்கத்தில் ஊற்றுதபடி தடுக்கப்பட்டிருக்கிறதென்றும், சாக்கடைத் தண்ணீரைக் கழிக்க நகரில் பல பாகங்களில் இதற்கென இடம் ஒதுக்கப்படவில்லையென்றும் இது விஷயமாய் வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படுமென்றும்; ஜனன மரண சர்ட்டிபிகேட்டுகளுக்கு முனிசிபல் ஆபீசில்தான் மனுச் செய்து கொள்ளவேண்டும் என்றும்; முனிசிபல் சிப்பந்திகள் ஆபீஸ் வேலைக்கிடையில் தனி வருமானம் தேடுவது சட்ட விரோதம் என்றும், போதுமான ஆதாரத்துடன் தெரிவித்தால் நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படும் என்றும் தெரிவிக்கப்பட்டது.

மதருஸ் குருடர்கள் சங்கம்

முனிசிபல் கவுன்சிலை வருடாந்திர சந்தாதாரராகச் சேரும்படி கேட்டுக்கொண்டிருக்கும் மதருஸ் குருடர்கள் சங்கத்தின் கௌரவக் காரியதரிசியினிடமிருந்து வரலான வேண்டுகோளுக்கிசைந்து, அடுத்த வருஷம் முதல் ரூ. 25 கொடுத்து சந்தாதாரராகச் சேர்ந்து கொள்வதென்று தீர்மானிக்கப்பட்டது.

சாங்ஷன்கள்

வாட்டர் சப்ளை பம்பிங் ஸ்டேஷனுக்கு பர்னிச்சர் சப்ளை செய்ய ரூ. 25-ம், செக்காலை ரோட்டில் தண்ணீர்ப் பந்தல் கட்டுவதற்கு (ஸ்ரீ பழ. சிதம்பரம் செட்டியாரின் நன்கொடை ரூ. 150) 150-ம்; முத்துப்பட்டணம் புதுப்பள்ளிக்கூடத்திற்கு பர்னிச்சர் சப்ளை செய்ய ரூ 237 ம்; குஞ்சான் செட்டியார் சந்தும் வெள்ளக்குண்டார் சந்தும்சேர்ப்பதற்காகக் காரைக்குடி கண்மாய் வாய்க்காலில் ஓர் கால் நடைப் பாலம் கட்ட ரூ. 780ம் ஆகிய எஸ்டிமேட்டுகளுக்கு சாங்ஷன் செய்யப்பட்டது.

செஞ்சை தாய் சிசு சம்ரக்ஷணை

செஞ்சை தாய் சிசு சம்ரக்ஷணை சாலையில் ஓர் பாகசாலை கட்டுவதற்கு ஒரிஜனல் எஸ்டிமேட் ரூ. 230. இதற்கு ரிவைஸ்டு எஸ்டிமேட் ரூ 260 சாங்ஷன் செய்யப்பட்டது.

மெட்டல் பரப்புவதும் கீல் போடுவதும்

ரோடில் மெடல் பரப்புவதற்கும் கீல் போடுவதற்கும் 1939-40 ம் வருஷத்து கண்டிராக்டர் ஷேக் உமார் சாகிப்புடைய ஒப்பந்தங்கள் அங்கீகரிக்கப்பட்டன.

எம். எஸ். ஏ. எம் தண்ணீர்ப்பந்தல்

ரயில்வே ஸ்டேஷன் ரோடு 3வது வார்டு டி.எஸ். 424ல் எம்.எஸ். ஏ.எம். தண்ணீர்ப்பந்தல் சம்பந்தமாய் டவுன் சர்வேயர் ரிபோர்ட்டும் கமிஷனரின் குறிப்பும் பரிசீலனை செய்யப்பட்டு, ஏலியனேட் செய்து தரும்படி சர்க்காரைக் கேட்டுக் கொள்வதெனத் தீர்மானிக்கப்பட்டது.

சொத்துவரி வரப்பற்றுவதற்கு தேவகோட்டை டி. மு. கோர்ட்டில் ஏற்பட்ட தீர்ப்பு டிக்ரியின் பேரில் ஸ்ரீ கே. டி. கே. ஏ. எல். அழகப்ப செட்டியாரால் போடப்பட்டிருக்கிற சப் கோர்ட் அப்பீலை எதிர்வாதம் செய்வதெனத் தீர்மானிக்கப் பெற்றது.

முத்தாளம்மன் கோவில் டிரஸ்டிகள்

ரோட்டிற்காக அக்வயர் செய்யப்பட்ட நிலத்தின் கிரயத்தின்பொருட்டு டிரஸ்டிகளுக்குச் செல்ல வேண்டிய தொகையை எக்ஸிகியூடிவ் ஆபீசருக்கு கொடுப்பதை நிறுத்த தேவகோட்டை டி. மு. கோர்ட்டில் முத்தாளம்மன் கோவில் டிரஸ்டிகளால் கவுன்சில் மீது தொடரப்பட்டிருக்கும் வியாஜ்யத்தை எதிர்வாதம் செய்ய கவுன்சில் சாங்ஷன் அளித்தது.

முனிசிபல் சூட்டுகளும் வக்கீலும்

இப்பொழுது பைசலாகாமல்நடந்துகொண்டிருக்கும் எல்லா சர்வே சூட்டுகளையும் இராமநாதபுரம் கவர்ன்மெண்ட் பிளீடருக்கும் தேவகோட்டையில் இருக்கும் சர்க்கார் வேலை செய்துகொண்டிருக்கும் வக்கீலிடமும் கொடுக்கக் கவுன்சில் சம்மதப்படுகிறதாவென்று கேட்டுவரலான இராமநாதபுரம் ஜில்லா கலெக்டரின் கடித சம்பந்தமாக,

'ஏற்கனவே பீஸ் செட்டில் செய்த கேஸ்கள்போக இனி புதிதாகவுள்ள கேஸ்களை சர்க்கார் வக்கீலுக்கே அனுப்புவதென்று' தீர்மானிக்கப்பட்டது.

கல்லுக்கட்டி ஊருணி

கல்லுக்கட்டி ஊருணி மூடுவது சம்பந்தமாய் மதருஸ் ஹைகோர்ட் கேசுகளில் பீசுக்கும் செலவுக்குமாக ரூ. 125 கொடுக்க வேண்டுமெனக் கோரி வரலான திரு. வி. பி. சக்கரவர்த்திக்கு ரூ. 75 அனுமதிக்கப்பட்டது.

தோகை வசூலிக்க கமிட்டி

சிவப்பிரகாசம் பிள்ளை பேரில் உள்ள தேவகோட்டை டி. மு. கோர்ட் சூட்டு, டிக்ரி வசூல் செய்ய ஏற்பட்டிருக்கிற நடவடிக்கையில்,ஷை தொகையை வஜா செய்யவேண்டியதில்லையென்றும் தொகையை வசூலிக்க (1) திரு அ. கா. அல்லாபிச்சை அம்பலம், (2) திரு சு. கந்தசாமி ஆகிய இருவரையும் கொண்ட கமிட்டி நியமிக்கப்பட்டது.

கணக்குகள்

1939-ம் வருடம் ஏப்ரல், மே, ஜூன் மாதங்களுக்குள்ள வருமானம் வரவு மீதி கணக்கும் மாதக் கணக்குகளும் ஒப்புக்கொள்ளப்பட்டன.

1939-40-ம் வருடத்துக்கு கவர்ன்மெண்டாரைக் கேட்கவேண்டிய கிராண்டு கடன் மனுக்கள் சம்பந்தமாகக் கமிஷனர் குறிப்பு அங்கீகரிக்கப்பட்டது.

கமிஷனர் குறிப்பு வருமாறு:

8—7—39௳ய கவுன்சிலின் 548 நெ. தீர்மானத்தில் 1940—41 ௵ அடியிற்கண்ட காரியங்களுக்கு கவர்ன்மெண்டாரை கடன் கேட்க வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது.

(1) குறுகலான வீதிகளை அகலப்படுத்துதல்.

(2) தேவகோட்டை ரோடு தேனுர் பாலத்தை அகலப்படுத்துதல்.

(3) ஜலசர்பரா ஸ்கீம்.
(4) வடிகால் திட்டம்.
(5) நகர நிர்மாணத் திட்டம்.

(6) வடக்கு டிவிஷனில் தோட்டிகளுக்கு விடுதி கட்டுதல்.

(7) பாற்சாலை.

இவ்வாபீஸ் 31—7—39௳ லெட்டரில் கவன்மெண்டுக்கு 1, 2, 3 அயிட்டங்களுக்கு கடன் விண்ணப்பம் அனுப்பப்பட்டிருக்கிறது.

| | |
|---|---|
| குறுகலான வீதிகளை அகலப்படுத்த | ரூ. 12000—0—0 |
| தேனுர்பாலத்தை அகலப்படுத்த | ரூ. 10200—0—0 |
| ஜலசர்ப்பரா திட்டம் | ரூ 32700 |

(கடன் ரூ16350, கிராண்டு ரூ16350)

வடக்கு டிவிஷனில் தோட்டிகளுக்கு விடுதிகட்டும் விஷயமாய் முனிசிபல் ஹெல்த் ஆபீசரின் ரிபோர்ட்டு வைக்கப்பட்டிருக்கிறது. பாற்சாலைக்கு தேவையான நிலம், அரியக்குடி ரோடில் பரிவர்த்தனைக்கு எடுக்கும் விஷயமாய் கலெக்டருக்கு லெட்டர் எழுதப்பட்டிருக்கிறது. ஹோஸ்பர், ஜீவப்பிராணிகள் அபிவிருத்தி ஆபீஸர் ஷை இடத்தைப் பார்வையிடுவதாய் வாக்களித்திருக்கிறபடியாலும், மேல் நடவடிக்கை, இடம் அவரால் அனுமதிக்கப்பட்ட பிறகு எடுத்துக்கொள்ள வேண்டியிருப்பதாலும், இந்த அயிட்டத்திற்கு கவர்ன்மெண்டாரை இப்போது கடன் கேட்கவில்லை. அதே பிரகாரம் நகர நிர்மாண திட்டம், முடிவாக பிரசுரிக்கப்படாமையால் அதன் சம்பந்தமாக கடன் கேட்க முடியவில்லை.

வடிகால் திட்டத்திற்காக 6,90000 கடன் கேட்கும்படி உத்தேசித்திருக்கது. 1940-41ல் கடன் கேட்கும் முன் அதை திருப்பிக்கொடுக்கவேண்டிய மார்க்கத்தை முடிவாக தீர்மானிக்கவேண்டும். 37-38ல் வீதிகளுக்கு தார் போடுதல், காட்டம்மன் கோவில் பாலம் கட்டுதல், வீதிகளை அகலப்படுத்துதல், பார்க்கு கட்டுதல் முதலியவைகளுக்கு ரூ 50,500ம், தோட்டிகளுக்கு விடுதிகட்டவும், கக்கூஸ், சிறுநீர் கழிக்குமிடம் கட்ட ரூ 20,000 ஆக 2 கடன்கள் ரூ 70,500க்கு வாங்கப்பட்டது. முதற் கூறிய கடன் 10 வருஷத்திலும், இரண்டாவதாக கூறியது 20 வருஷத்திலும் திருப்பிக் கொடுக்க வேண்டியதாகும். கடன் மொத்த துகை ரூ 70,500. 1938௵ மார்ச்சு மாதம்தான் முனிசிபாடிக்கு கொடுக்கப்பட்டதால் ஷை துகையில் ஒரு சிறு பாகம்தான் 31-3-38க்குள் செலவானது. 38-39 வருஷம் ஆரம்ப இருப்பு ஜாஸ்தியான துகை ரூ 68,977—7—7 இருந்ததற்கு இது ஒரு முக்கிய காரணமாகும். 37-39ல் முனிசிபல் ஆபீசு கட்ட இடம் அக்குவயர் செய்து வேலை ஆரம்பிக்கலாமென்று எதிர்பார்த்ததால் 7-12-37ல் ஷை காரியத்திற்காக வட்டிக்குப் போட்டிருந்த துகை ரூ 13471-5-3 வாபஸ் வாங்கி, அதே வருஷத்தில் திருப்பி வட்டிக்குப்போடவில்லை. இந்த துகைகளும் 1—4—38ல் ஜாஸ்தியாக ஆரம்ப இருப்பு இருந்ததற்கு முகாந்திரமாகும். கடன் வாங்கிய காரியத்திற்காக குறிப்பிட்ட வேலைகள் 38-39ல் முடிக்கப்பட்டு கடன் துகை செலவு செய்யப்பட்டது. 38-39 வருஷம் முடிவுக்குள் முனிசிபல் ஆபீஸ் கட்டும் வேலை ஆரம்பிக்கப்படாதென்று எதிர்பார்த்ததால் 22-2-39ல் ஆபீஸ் கட்டிட நிதி வட்டிக்குப் போடப்பட்டது. ஆனால் எதிர்பாராத விதமாய் ரெயில்வே ஸ்டேஷன் ரோட்டில் ஆபீசுக்கு இடம் அக்வயர் செய்ய் award ஸ்டேட்மெண்டு ஜில்லாக் கலெக்டரால் அனுப்பப்பட்டு உடனே பணம் கட்டும்படி உத்திரவிடப்பட்

(11-ம் பக்கம் பார்க்க)







காந்தியடிகளின் 'ஹரிஜன்' கட்டுரை

## எனக்கும் காரியக் கமிட்டிக்குமுள்ள அபிப்பிராய பேதங்கள்

['மகாத்மா நினைக்கிறபடி காரியக்கமிட்டி ஆடுகிறது' என்று நம்மில் பலர் சொல்லுவது வழக்கம். ஆனால் உண்மையில் அப்படி இல்லையெனக் காந்தியடிகள் உதாரணத்தோடு விளக்கிவைக்கின்றார். காங்கிரஸ் ஸ்தாபனம் பொதுஜன அபிப்பிராயத்துக்கே இடமளித்து வருகின்றது—என்பதும், காந்தியடிகள் சொல்லுக்கு இணங்கித்தீர வேண்டுமென அது கண்மூடித்தனமாகச் செல்லவில்லையென்பதும் கவனிக்கத்தக்கவை.]

★

காங்கிரஸில் தமக்குள்ள செல்வாக்கு எவ்வளவு என்பதைப்பற்றி இவ்வார 'ஹரிஜன்' பத்திரிகையில், மகாத்மா காந்தி ஒரு கட்டுரை எழுதியிருக்கிறார். காங்கிரஸ் மந்திரிகளின் வேலைகளில்தான் தலையிடுவதில்லையென்பதையும், காந்திஜி தெளிவாக்கியிருக்கிறார். இந்த வாரம் இரண்டு காங்கிரஸ்காரர்கள் காந்திஜியிடம் வந்து பேசிக் கொண்டிருந்தார்கள். அதன் பலனாகத்தான் காந்திஜி இக்கட்டுரையை எழுதியிருக்கிறார்.

முதல் நண்பர் சொன்னார்:—

"நீங்கள் நினைத்ததைச் செய்யமுடியுமென்று மத்ய மாகாணத்திலுள்ள நாங்கள் நினைக்கிறோம். நீங்கள் நினைத்தால் மந்திரிசபையை நீக்கிவிடமுடியும். உங்கள் இஷ்டப்படி அவர்கள் நடக்கும்படியும் நீங்கள் செய்யமுடியும்"

ஒரு நண்பர் சந்தேகம்

மற்றொரு நண்பர் சொன்னார்:—

"நீங்கள் தான் காரியக்கமிட்டி. ஆகவே, இப்போதுள்ள ஊழல்களுக்கு, எல்லா காங்கிரஸ்காரர்களும் உங்கள் மீது தான் குற்றம் சொல்லுகிறார்கள். ஒழுக்கமும் சீலமும் தான் எல்லாவற்றையும்விட உயர்ந்ததென்று நீங்கள் எங்களுக்கு காட்டினீர்கள். இப்போதுள்ள ஆட்சி சைத்தான் ஆட்சி என்று நீங்கள்தான் எங்களுக்கு போதித்தீர்கள். காங்கிரஸ் ஆட்சி வந்தால் அக்ரமம் இருக்காதென்று நீங்கள் தான் எங்களுக்கு உபதேசம் செய்தீர்கள். காங்கிரஸ் ஆட்சியில் வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் பரிசுத்தம் இருக்குமென்று சொன்னீர்கள். ஆனால், இன்று நிலைமை அதற்கு நேர்மாறாயிருக்கிறது. பல மாகாணங்களில் காங்கிரஸ் ஆட்சி நடக்கிறது. இருந்தாலும் ஊழல்கள் அப்படியே இருக்கின்றன. காங்கிரஸ்காரர்கள் தங்களுக்குள்ளாகவே சண்டை போட்டுக் கொள்ளுகிறார்கள். நிலைமை மிகவும் க்ஷீணித்துப் போயிருக்கிறது. அக்ரமம் தொலையவில்லை. எண்ணிக்கையைப்பற்றி எனக்கு கவலையில்லையென்று நீங்கள் சொல்லுகிறீர்கள். உண்மையான சில நல்ல காங்கிரஸ்காரர்கள் இருந்தால் கூட, அவர்களுடைய ஒழுக்கத்தின் மூலம், தேசம் பூராவுக்கும் அவர்கள் பிரதிநிதித்வம் வகிக்க முடியுமென்றும் அதிலிருந்து உண்மை ஜனநாயகத்தை சிருஷ்டிக்க முடியுமென்றும் நீங்கள் அடிக்கடி சொல்லியிருக்கிறீர்கள். ஆனால், இன்று தன்மையைவிட எண்ணிக்கையில் தான் அதிக ஆர்வம் காட்டுகிறார்கள். சமீபத்தில் காங்கிரஸ் அமைப்பு விதிகளில் செய்யப்பட்ட மாறுதல்களால் ஒரு பிரயோஜனமுமில்லை. அதிகமாய்க் கொண்டு வரும் ஊழல்களை அத்திருத்தங்கள் குறைக்கப் போவதில்லை. கட்டுக் கடங்காமல் இருக்கும் காங்கிரஸின் அளவையும் அவை குறைக்கப் போவதில்லை. நீங்கள் சொல்வது காரியக் கமிட்டியில் ஏறவில்லையென்றால், அதையும் சொல்லி விடுங்கள். நீங்கள் நினைத்தால் எதையும் செய்யஉங்களுக்கு சக்தியிருக்கிறதென்றே நாங்கள் நினைப்பதால் நிலைமை இப்படி கேவலமாய்ப் போவதை நீங்கள் அனுமதிப்பதைக் கண்டு எங்களுக்கு ஆச்சரியமாயிருக்கிறது.

கதர் விதியை எடுத்துக்கொள்ளுங்கள். இதனால் காங்கிரஸில் வேஷம் போடுவது ரொம்ப ஜாஸ்தியாய் விட்டது. கதரில் நம்பிக்கையுள்ளவர்கள் வெகு சொல்பம் தான். ஆகையால், மற்றவர்கள் வெளிவேஷத்திற்காகத்தான் அதை உபயோகிக்கிறார்கள். ஆகவே, கதர் என்பது அசத்தியத்துக்குஅடையாளமாய்விளங்குகிறது. தேசத்தை ஒரு உன்னதமான சிகரத்தில் ஏற்றிவைத்த நீங்கள், இப்போது அதைக் கீழே இறக்குகிறீர்கள். இது மாதிரியே போய்க் கொண்டிருந்தால், சீக்கிரத்தில் காங்கிரஸைக் கண்டு ஊரார் நகைக்கும் நிலைமை வந்துவிடும். காங்கிரஸை உங்களால் திருத்த முடியவில்லை யென்றால், அதை பேசாமல் விட்டுவிடுவது தானே."

நண்பர்களின் மேற்கண்ட புகார்களுக்கு காந்திஜி பின்வருமாறு பதிலளித்திருக்கிறார்:

"இரண்டாவது நண்பர் பிரபல காங்கிரஸ்காரர். அவர் மிகுந்த உணர்ச்சியுடன் பேசினார். நான் அவருக்களித்த பதிலின் கருத்தை 'ஹரிஜன்' பத்திரிகையில் வெளியிடுவதாக அவரிடம் வாக்களித்தேன்.

மத்ய மாகாண மந்திரிகள் விஷயத்திலோ, காரியக் கமிட்டியிலோ, நான் சர்வ வல்லமையுள்ளவனல்ல. மந்திரிகள் என்ன செய்கிறார்களென்பதைப் பற்றி எனக்கு அதிகமாகத் தெரியாது. அவர்களுடைய வேலையில் நான் தலையிடுவதே இல்லை. அது என்னுடைய வேலையென்று நான் கருதியதேஇல்லை. கிராமக் கைத்தொழில்கள், மூலக்கல்விபோன்ற விஷயங்களைப்பற்றி எப்போதாவது அவர்களுடன் நான் கடிதப் போக்குவரத்து வைத்துக்கொள்வதுண்டு. சாதாரணமாக எந்த பிரஜையும் செய்வதுபோலவேதான் நானும் செய்கிறேன். அவர்களுடைய வேலையில் தலையிட முடியாதென்றே நான் எப்போதும் மறுத்து வந்திருக்கிறேன். நான் தலையிடவேண்டுமென்று விரும்பினாலும், எனக்கு அவகாசம் கிடைக்காது. அப்படிச் செய்வது பார்லிமெண்டரி சப் கமிட்டியின் வேலையில் ஆக்ரமிப்பதாகும்.

காரியக் கமிட்டியிடம் உள்ள சம்பந்தம்

காரியக் கமிட்டி கூட்டங்கள் சம்பந்தப்பட்ட வரையில் என்னை அழைக்கும்போது நான் போகிறேன். என்னை அப்பிராயம் கேட்டால் ஏதாவது சொல்லுகிறேன். என்னைக் கேட்காத விஷயங்களைப்பற்றி நான் ஒன்றும் சொல்வதில்லை. பல கூட்டங்களுக்கு நான் போவதே இல்லை. அவர்கள் நிறைவேற்றும் பல தீர்மானங்கள் எனக்கு தெரியவே தெரியாது. பத்திரிகைகளில் வெளியான பிறகு தான் எனக்குத் தெரியும். காங்கிரஸுக்கும், எனக்குமிருந்த சம்பந்தத்தை நான் கத்தரித்துக் கொண்டபோது செய்யப்பட்ட ஏற்பாடு இது தான். நான் சொல்வது சரியாக இருந்தால் தானே என் அபிப்ராயம் ஏற்றுக் கொள்ளப்படும். ஒரு ரகசியத்தை வெளியிடுகிறேன். பல சமயங்களில் நான் சொல்லும் அபிப்பிராயம் காரியக் கமிட்டி மெம்பர்களுக்குப் பிடிப்பதில்லை. உதாரணமாக என் இஷ்டப்படி விட்டால், காங்கிரஸை மிகவும் சிறியதாகக் குறைத்து விடுவேன். பொறுக்கி யெடுக்கப் பட்ட சிலர்தான் அதில் இருப்பார்கள். தேசம் நினைத்தபோது அவர்களை நீக்கி விடலாம் ஆனால், அவர்கள் சமர்ப்பிக்கும் வேலைத் திட்டத்திற்கு தேச மக்களின் மனப்பூர்வமான ஒத்துழைப்பு கிடைக்கும் முறையில் நடந்து கொள்வார்கள். ஆனால், இது ரொம்ப கடுமையானது. இது ஜனநாயகத்துக்கு முரணாயிருக்கிறதே யென்று காங்கிரஸ்காரர்கள் சொல்லுவார்கள்.

கதர் விதியினால், பொய்யும், வேஷமும் ஏற்பட்டுவிட்ட தென்பதையும் ஒப்புக்கொள்ளுகிறேன். என்னிஷ்டப்படி விட்டால், அது வெகு நாளைக்கு முன்பே ரத்தாயிருக்கும். நான் காங்கிரஸிலிருந்து விலகிப்போதே அந்த விதியை ரத்து செய்ய முயற்சித்தேன். அதற்குப் பிறகும் பல தடவைகளில் முயற்சித்தும் பிரயோஜனப்படவில்லை. இந்த விதியை ரத்து செய்வதை பொதுவாக காங்கிரஸ்காரர்கள் ஒப்புக்கொள்ளமாட்டார்கள் என்று எனக்குப் பதில் சொல்லப்பட்டது. அதைப் போலவே காங்கிரஸ் அமைப்பிலிருந்து, "அமைதியானதும் நியாயமானதுமான" என்ற வார்த்தைகளை எடுத்துவிடவும் பல தடவை முயற்சித்திருக்கிறேன். காரியக்கமிட்டி என் அபிப்பிராயத்தை ஏற்றுக்கொள்ளாத சந்தர்ப்பங்கள் இன்னும் எவ்வளவோ இருக்கின்றன.

காரியக் கமிட்டிமீது புகார் செய்யும் முறையில் இதையெல்லாம் நான் சொல்லவில்லை. என்னுடைய அபிப்பிராயத்தை ஒப்புக்கொள்ளாததற்கு அவர்களுக்கு நல்ல காரணங்களிருந்தன. இதனால் எனது பழைய சகபாடிகளிடமிருந்து பிரிந்துவிட வேண்டுமென்று என் மனதில் படவில்லை. அவர்களைவிட நான் உயர்ந்தவன் என்ற கர்வம் எனக்கில்லை. அவர்களுடன் சேர்ந்து வேலைசெய்வது ஒரு பாக்கியம். என்னைப்போல் அவர்களும் உண்மையான தேச ஊழியர்கள் தான். என்றைக்காவது ஒரு நாள் அவர்கள் என் கருத்தை ஒப்புக்கொள்வார்கள். அல்லது அவர்கள் கருத்தை நான் ஒப்புக்கொள்வேன் என்ற நம்பிக்கையுடன் நான் அவர்களிடம் ஒட்டிக் கொண்டிருக்கிறேன்.

மந்திரிகளின் நல்ல வேலை

இப்போதுள்ள ஆட்சியை விட இதற்கு முன்னிருந்த ஆட்சி இன்னம் சுத்தமாக இருந்ததென்று சொல்வதையும் நான் ஒப்புக்கொள்ளவில்லை. காங்கிரஸ் ஸ்தாபனத்துக்குள் ரொம்ப ஊழல் புகுந்து விட்டதென்பதையும் அதில் பல சுயநலக்காரர்கள் இருக்கிறார்களென்பதையும் நான் ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால், பழைய நிர்வாகத்துடன் ஒப்பிட்டுப் பார்த்தால் காங்கிரஸ் நிர்வாகம் அதிக பரிசுத்தமாகத்தான் இருக்கிறதென்பதே என் திடமான நம்பிக்கை. மக்களின் நன்மைக்கான பல காரியங்களை காங்கிரஸ் மந்திரிகள் செய்திருக்கிறார்களென்றும் நான் உறுதியாக நம்புகிறேன். இவைகளில் மதுவிலக்கு தலைசிறந்ததென்று நான் நம்புகிறேன். ஆனால் இன்னும் செய்ய வேண்டியது எவ்வளவோ பாக்கி இருக்கிறதென்பதிலும் சந்தேகமில்லை.

காங்கிரஸின் ஊழல்கள் என்றைக்காவது நிவர்த்தியாகி அது பரிசுத்தமாய் விடுமென்றும் நான் நம்பிக் கொண்டிருக்கிறேன். அவர் பயப்படுவதற்குக் காரணமிருக்கிறதென்பதை மறக்க முடியாது. ஆனால் எதுவும் கடைசியாக சரியாய்விடுமென்பதில் எனக்கு மிகுந்த நம்பிக்கையுண்டாதலால், அவரைப்போல்,இதையெல்லாம் கண்டு நான் அவ்வளவு மலைக்கவில்லை, ஒவ்வொரு காங்கிரஸ்காரரும் தன் கடமை என்ன வென்பதைச் சிந்தித்துப் பார்க்கும்படிதான் நிலைமை இருக்கிறது. பரிசுத்தம்தான் காங்கிரஸின் அஸ்திவாரம். அது இல்லையென்றால் காங்கிரஸ் போய் விடும்."

### சிவகெங்கை

நகர அரசியல் மகாநாடு

12-8-39 மாலை இவ்வூர் காங்கிரஸ் கமிட்டி காரியாலயத்தில் நடைபெற்ற வரவேற்புக் கமிட்டி அங்கத்தினர்கள் கூட்டத்தில் மகாநாட்டை செப்டம்பர் மாதம் 10உ ஞாயிற்றுகிழமை நடத்துவதெனத் தீர்மானிக்கப் பெற்றது. கீழ்க்கண்டவர்களும் இன்னும் 6 பேர் அடங்கிய நிர்வாகக் கமிட்டி அமைக்கப்பெற்றது.

ஸ்ரீ எஸ். எம். நாராயண அய்யங்கார் வரவேற்புக் கமிட்டித் தலைவராகவும், ஸ்ரீமான்கள் எம். பொன்னுச்சாமி பிள்ளை, இ. ஷேக் தாவுத், எஸ். சூரியநாராயண சர்மா, எஸ். மாணிக்கம் சேர்வை, த. பெ. சின்னய்யாக் கோனார் ஆகியோர் உபதலைவர்களாகவும், ஸ்ரீமான்கள் ஆர். சுப்பிரமணியம், ஆர். ராமானுஜம், எம். சுப்பிரமணியம் ஆகியோர் காரியதரிசிகளாகவும் ஸ்ரீ கே. சுந்தரராஜன் தொண்டர் படைத்தளகர்த்தராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

### வாசுகிபுரம்—இராயவரம்

8-8-39 பிற்பகல் வாசுகிபுரம் திருவள்ளுவர் கல்விக்கழகத்தில் மாணுக்கர்கள் வாரக்கூட்டம் திரு. காளலிங்கம் பிள்ளை தலைமையின்கீழ் நடைபெற்றது. மாணுக்கர்களான, இராமன், மணிவாசகன், இராமசுவாமி, ஞானசம்பந்தன், பாலகிருஷ்ணன், வேல்சாமி ஆகியோர்கள் முறையே, ஔவையார், விவசாயம், உணவு, நெசவு, பற்கள், சொல் என்ற பொருள்கள் பற்றி, பேசினர்கள. கழக ஆசிரியர் ஸ்ரீ பாலசுப்பிரமணியம் சுகாதாரம் என்ற விஷயம் பற்றிப் பேசினர்.

### ஜில்லா போர்டு தேர்தல்

தேதி விபரம்

இப்போது நடக்கப்போகிற ஜில்லா போர்டு தேர்தல்களுக்குக் கீழ்க்கண்ட தேதிகளை சென்னை சர்க்கார் நிர்ணயித்திருக்கின்றது.

ராமனுதபுரம், சேலம், நெல்லூர் போர்டுகளுக்கு செப்டம்பர் 11ந்தேதி நாமினேஷன் பாரம் தாக்கல் செய்யவேண்டும். அக்டோபர் 7 ம்தேதி தேர்தல்தினம். தஞ்சாவூர், கோயம்புத்தூர் கீழ்கோதாவரி போர்டுகளுக்கு செப்டம்பர் 21ம் தேதி நாமினேஷன் பாரம் தாக்கல் செய்யவேண்டும். அக்டோபர் 19ல் தேர்தல் நடக்கும்.

காங்கிரஸ் அபேட்சகர்கள்

இந்தத் தேர்தல்கள் சம்பந்தமாக காங்கிரஸ் சார்பாக நிற்க விரும்பும் அபேக்ஷகர்தள் தங்கள் மனுக்களை ஜில்லாக் கமிட்டி காரியதரிசியிடம் கொடுக்க ஆகஸ்ட்டு 18உ வரை அவகாசம் நீடிக்கப்பட்டிருக்கிறது. மனுக்களை 20உக்குள் தமிழ்நாடு கமிட்டிக்கு அனுப்பவேண்டும் என்று தமிழ்நாட்டு காங்கிரஸ் தலைவர் ஸ்ரீமான் ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் அறிவிக்கிறார்.

இரமநாதபுரம் ஜில்லா

9 சர்கிளிகளுக்கும் 42 ஸ்தானமும் ஒதுக்கப்பட்ட ஸ்தானங்கள் 10ம் ஆக 52 ஸ்தானங்கள்.

### திருப்பத்தூர் தாலுகா காங்கிரஸ் கமிட்டி

காரியதரிசி ஸ்ரீ பி. எம். கிருஷ்ணன் அறிவிக்கிறார்:

18-8-39 அன்று மாங்கொப்பு கிராம காங்கிரஸ் மாளிகையில், திருப்பத்தூர் தாலுகா காங்கிரஸ் கமிட்டி கூட்டம் நடைபெறும். திருப்பத்தூர் கீழச்செவல்பட்டி ரோட்டில் இரணியூர் விலக்குப் பாதையிலிருந்து மாங்கொம்புக்கு அழைத்து வருவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

### திருவாடானை

10-8-39 காலை ஆர். வி சாமிநாதன் இவ்வூருக்கு வந்திருந்தார். இவ்வூர் கிராமக் காங்கிரஸ்சபை அவரை வரவேற்றது. மாலை 5 மணிக்கு போஸ் மைதானத்தில் வலமாவூர் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவர் தலைமையில் ஓர் பொதுக்கூட்டம் நடைபெற்றது. ஸ்ரீ சுவாமிநாதனுக்கு கமிட்டித் தலைவர் ஸ்ரீ எம். தியாகராஜன் கமிட்டியின் சார்பில் வரவேற்புப் பத்திரம் ஓலையில் வாசித்துக்கொடுத்தார். ஸ்ரீமான்கள் சுவாமிநாதன், பிரசாரகர் பி. செல்லத்துரை. சுப. நடராஜன், மாணவி டி. வி. ராஜலட்சுமி, மாணவன் துரைராஜு, நாராயணசாமி அய்யங்கார், தங்கச்சாமி முதலானவர்கள் வருகிற ஜில்லாபோர்டு தேர்தலும் வாக்காளர் கடமையும் ஆலயப்பிரவேச விஷயம் காங்கிரஸ் மந்திரி சபையார் செய்த நன்மைகள் என்பன பற்றி பேசினர்கள். பெரியய்யா வந்தனோபசாரம் கூறினர்.

### தேவகோட்டை

விடுதலை பெற்ற கைதிகள் சங்கம்

தேவகோட்டை, விடுதலை பெற்ற கைதிகள் சங்கத்தின் அரை வருஷக் கூட்டம் 26-8-39 சனிக்கிழமை மாலை 5 மணிக்கு சப் கலெக்டர் ஆபீச இருக்கிற இடத்தில், தேவகோட்டை சப் கலெக்டர் ஸ்ரீ எம். எஸ். சிவராமன் ஐ. சி. எஸ். தலைமையில் நடைபெறும் என கௌரவக் காரியதரிசி ஸ்ரீ எஸ். சிவசுப்ரமண்யம் அறிவிக்கின்றார்.

யுனைடெட் அசோஸியேஷன்

இச்சங்கத்தின் நிர்வாகக் கூட்டம் 12-8-39 மாலை திரு கு. முத்து பழநியப்பச் செட்டியார் தலைமையில் நடைபெற்றது. பின் வரும் தீர்மானங்கள் நிறைவேறின.

கண்டதேவி ரோட்டிலிருந்து செப்பலயலார் வீதிக்கு கிழ மேலாகச் செல்லும் ரோட்டிற்கு "ராஜாஜி தெரு" எனப் பெயர் கொடுக்கவும் கல்லுப்பட்டியார் வீதியில் வட கடைசியிலுள்ள கிழமேல் ரோட்டிற்கு "கம்பர்" தெரு எனப் பெயர் கொடுக்கும்படி இக் கூட்டம் தேவகோட்டை முனிசிபாலிட்டியாரை கேட்டுக்கொண்டது.



### நோட்டீஸ்

தேவகோட்டை டி. மு. கோர்ட்டு

S. C. No 639 of 1938

இராமநாதபுரம் ராஜா ஷை எஸ்டேட் மானேஜர் மூலம் } வாதி

(1) புதுப்பட்டணம் முகம்மது அபுல் அசன் (2) ஷை யூர் செ. மு. த. ஹமீது சுல்தான், (3) ஷை யூர் முகம்மது மரக்காத் தம்பி மரக்காயர் (4) ஷை யூர் நயினா முகம்மது மரக்காயர். } (1) முதல் (4) பிரதிவாதிகள்.

அதவத்தூர் கிராமம் சம்பந்தமான 1347-ம் பசலி செஸ்கள் வகையரு பாக்கி ரூ. 214—5—3 வரப்பத்த பிராது செய்து 26-8-39 தேதி வாய்தா போட்டிருக்கிறார்கள். எதிர்வாதமிருந்தால் ஷை வாய்தாவன்று கோர்ட்டில் ஆஜராகித் தெரிவித்துக் கொள்ளலாம்.

S. ஜெகன்னாத அய்யங்கார்

தேவகோட்டை, 8—8—39. } அட்வகேட்.

### நோட்டீஸ்

தேவகோட்டை டி. மு. கோர்ட்டு

S. C. No. 582 of 1938

செ. சு. பெரிச்சியப்ப செட்டியார் —வாதி.

முத்து. பள. ராம. தேவராயன் செட்டியார் —பிரதிவாதி.

ஷை பிரதிவாதிக்கு,

வாதிக்கு நீர் எழுதிக் கொடுத்திருக்கிற புரோகோட்டுப்படி கூடுதலாகும் தொகைக்கு ஷை நம்பரில் வாதி உமது பேரில் வியாஜ்யம் தாக்கல் செய்து 26—8—39உ வாயிதா ஏற்பட்டிருக்கிறது. ஷை தேதியில் ஆஜராகி உமது எதிர்வாதத்தை தெரிவித்துக் கொள்ளவும்.

M. R. சிவராமகிருஷ்ணய்யர்

தேவகோட்டை, 14—8—39. } வாதிவக்கீல்.

# ஊழியன்

பொங்குபுகழ்ப் பாரதத்தாய் பொருந்தமணி முடிபுனைந்து புலவர் போற்றச்
சிங்கஅணை மீதிருந்து தனியரசு செலுத்தியுயர் செங்கோல் தாங்கி
எங்குமொளி வீசஆறம் யாவுநனி வளர்ந்தோங்க இடொன் றில்லா
எங்கள்தமிழ் இனியநறும் மணம்மலர ஊழியமே ஏற்றிட் டேனுல்

பிரமாதி-ஞு ஆவணி-மீ 1௳ (17—8—39) வியாழன்

## திரு. சுபாஷ் விலக்கப்பட்டார்

திரு. சுபாஷ் சந்திரபோஸ் வங்காள மாகாணக் காங்கிரஸ்க் கமிட்டித் தலைவர் பதவியினின்றும் அகில இந்தியக் காங்கிரஸ்க் காரியக்கமிட்டியால் விலக்கப்பட்டார். அதோடு மூன்று ஆண்டுகளுக்கு அவர் காங்கிரஸ் ஸ்தாபனத்தில் நிர்வாக பதவி எதுவும் ஏற்கக் கூடாதென்று தடையும் விதிக்கப்பட்டார். அகில இந்தியக் காங்கிரஸ் மகாசபையின் அக்ராசனராக இருந்த ஒருவர் மீது, ஒரு சிறு கிராமக் காங்கிரஸ்க் கமிட்டியிற்கூடப் பதவி வகிக்கக்கூடாதென்று விலக்கு ஏற்படுத்தியிருப்பது, காங்கிரசின் பன்னெடுநாட் சரித்திரத்தில் இதுகாறும் இல்லாத ஒன்று. திரு. சுபாஷ் சந்திரரின் விபரீதப் போக்கு அவரை விலக்குவதைத் தவிர வேறு வழியில்லையென்ற நிலைமையை உண்டாக்கிவிட்டது. ஸ்ரீ போஸ் நடாத்திய காங்கிரசுக்கு மாறுபட்ட ஆரவாரங்களை நடுநிலையோடு கூர்ந்து நோக்கும் எவரும் அவரை நீக்கியது தவறெனக் கூறத் துணியார்.

காங்கிரஸ்க் காரியக் கமிட்டியிலிருப்போர் தமக்குப் பிடிக்காத எல்லோரையும் துரத்திவிடவேண்டும் என நினைக்கும் விளையாட்டுப் பிள்ளைகளல்லர். காங்கிரசின் பலத்தை வளர்ப்பதில்யாருக்கும் பின்வாங்காத அறிஞர்களே காங்கிரஸ் காரியக்கமிட்டியில் இருக்கின்றனர். அதன்தலைவர் 'உலகனைத்தும் ஓருயிர் என்று உணர்ந்த ஞானி' ராஜேந்திரப்பெரியார். தேர்தல் போராட்டங் காரணமாக அத்தலைவர்கள் திரு. சுபாஷ்மீது பாய்ந்தனரெனக் கூறப்படுமானுல் அக்கூற்று அநியாயமானது. திரு. சுபாஷ் போலிக்காரணம் எதுவும் காட்டி விலக்கப்படவில்லை. பாபு சுபாஷ் காங்கிரஸ் தலைவரால் எவ்வளவோ எச்சரிக்கப்பட்டும் வேண்டுமென்றே தலைவர் ஆணையை மீறி ஒழுங்கு தவறி நடந்தார். அகில இந்தியக் காங்கிரஸ்க் கமிட்டியின் தீர்மானங்களை எதிர்த்து நாடு முழுமையும் கூட்டங்கள் கூட்டி ஆரவாரம் செய்யச் செய்தார் ஸ்ரீ சுபாஷ் சந்திரர்.

"அது தவறான வழி! அப்படிச் செய்யக்கூடாது" என ராஷ்ட்ரபதி ராஜேந்திரர் ஸ்ரீ போசுக்கு அறிவித்தார். போஸ் அதனைப் பொருட்படுத்தவில்லை; தாம் நினைத்தபடி செய்தே தீரப்போவதாகப் பதில் சொல்லிவிட்டார்; அப்படியே நாடு முழுமையும் ஆர்ப்பாட்டங்களை நடாத்தினர்; காங்கிரஸ் தம் மீது எடுக்கப்போகும் ஒழுங்கு நடவடிக்கையை வரவேற்பதாக அறைகூவினர். இந் நிலைமையில் காரியக் கமிட்டி இப்போது செய்ததைத் தவிர வேறு செய்யக் கிடப்பது என்னை? திரு. சுபாஷ் சந்திரரைக் காரியக் கமிட்டி விலக்காதிருந்தால், அது ஒழுங்கை நிலைநாட்ட வேண்டிய முதற்கடமையினின்றும் தவறிய பழியை அடையும். ஒழுங்கை மீறுபவர் யாராக இருந்தாலும் தண்டிக்க வேண்டுவதே. அதில் பாரபட்சம் பார்க்கப்படுமானுல் காங்கிரசும் மற்றைய அரசியல் சிறு கட்சிகள் வரிசையில் வைத்து எண்ணத்தக்கதாகவே ஆகிவிடும்.

காங்கிரசுக்கு, மாகாணத் தலைவர்களானுலும் மந்திரிகளானுலும் அகில இந்தியத்தலைவர்களேயானுலும் ஒன்றுதான். குற்றம் செய்வோருக்குத் தண்டனை உறுதி. இன்னோரன்ன உயரிய ஒழுங்குமுறைகள் கொண்டமையினுலேயே காங்கிரசின் புகழ் உலகம் முழுமையும் வீசுகிறது. திரு. சுபாஷ் விஷயத்தில் எதைச் செய்யவேண்டுமோ அதைத்தான் காரியக் கமிட்டி செய்தது. என்றாலும் பிரமாதமாக எதையோசெய்து விட்டதாகப் பலர் கருதுகின்றார். அது எதனுல்? பலர்க்கு இதுபோன்ற காரியம் செய்யத் துணிவு ஏற்படாது. 'பழய ராஷ்ட்ரபதியல்லவா! அவர் தேசம் முழுதும் ஒரு கட்சியை உண்டாக்கி வைத்திருக்கிறாராமே! அவரைத் தள்ளினுல் அப்படியே கவிழ்த்து விடமாட்டாரா! அவரைப் பின்பற்றுவோர் பொல்லாதவர்களாமே!' என்றெல்லாம் எண்ணித் தலையைத் தொங்கவிட்டுக்கொண்டு கவலைப்படுவோர் காரியக்கமிட்டியில் இல்லை.

காங்கிரஸ்த் தலைவர் கட்டளையை மீறி ஒவ்வொருவரும் தாங்கள் நினைப்பதே சரியெனக் கண்ட கண்டபடி காரியங்கள் செய்ய ஏற்பட்டுவிட்டால் ஒழுங்கு முறை பாதுகாக்கப் படுவது எங்ஙனம்? தலைவர் தவருக ஒரு கட்டளை பிறப்பித்தாற்கூட அதற்குப் பரிகாரந்தேட முற்படலாமே யொழிய அதனை மீறக்கூடாதென்பதைக் காங்கிரசின் பழய தலைவர் உணராமற் போனதற்குக் காரணம் அவரது தற்காலப் போக்கைத் தவிர வேறில்லை. திரு. சுபாஷ் தமது தண்டனைக்கு வருந்தவில்லையாம்! அது சரி. தம்மைத் தண்டித்ததால் காரியக் கமிட்டிக்கே சிரமமாம்! அது ஏனோ? ஆஹா! என்ன மமதை!! கோபுரத்தைப் பதுமை தாங்குவதாக இந்தக் காலத்தில் ஏமாறுபவர் உண்டா! அவரைப் பிடித்துப் போன வருஷம் காந்தி காங்கிரஸ்த் தலைவராக்கி விட்டதாலல்லவா இவ்வளவு பேச்சு!

## இடி முழக்கம்

### காரைக்குடியில் கோவில் திறப்பு

நடந்த ஞாயிறன்று காரைக்குடிச் செஞ்சையிலுள்ள பிள்ளையார் கோவில் ஹரிஜனங்கட்குத் திறந்துவிடப்பெற்றது. இது என்ன, ஒரு சிறு கோவில்தானே என்று கூறுதற்கில்லை. மதுரைக் கோவில் திறக்கப்பட்ட பிறகு மற்றெதுவும் சிறிதே. என்றாலும் வைதீகர் என்போர்க்குப் பெரிதும் அடிமைப்பட்ட இத் தனவணிக நாட்டில் இப் பிள்ளையார் கோவில் திறப்பு ஒரு வழி கோலியதாகும். இக் கோவில் திரு. மெ. செ. இராமசாமிச் செட்டியாருக்குச் சொந்தமானது. இந் நல்ல காரியத்தை இப் பகுதியில் துணிந்து செய்த அன்பர் இராமசாமிச் செட்டியாரையும் இதற்குக் கருவியாக இருந்து நடாத்தி வைத்த அன்பர் அபிசீனியா நாச்சியப்பச் செட்டியாரையும் வாழ்த்துகிறோம்.

### நேருவின் சீனப் பிரயாணம்

பண்டித ஜவஹர்லால் நேரு 20ந் தேதி ஞாயிறன்று விமான மார்க்கமாய்ச் சைனுவுக்குப் போகிறார். சைனுவில் ஜப்பானியரை எதிர்த்துச் சுதந்திரப் போராட்டம் நடந்து வருகிறது. போர் தொடங்கி இரண்டு ஆண்டுகள் முடிந்து மூன்றுமாண்டு நடக்கிறது. இதற்குள் சீனத்துக்கு நேர்ந்துள்ள சங்கடங்கள் சொற்பமல்ல. உலகத்தில் பல எளியநாடுகள் வேறு வலிமையுள்ள பல நாடுகளை எதிர்த்துப் பொதுப் போர் நடத்துகின்றன. இந்தியா பிரிட்டனின் ஆதிக்கத்தை எதிர்க்கிறது; சீனம் ஜப்பானிய அதிக்கிரமத்தைத்தடுக்கிறது. எனவே சீனமும் இந்தியாவும் இன்று சுதந்திரப் பொதுப் போராட்டத்தில் ஒரே படியில்தான் நிற்கின்றன. மற்றும் கலைத்துறையிலும் சீனத்துக்கும் இந்தியாவுக்கும் தொடர்புண்டு. ஆதலின் சீனம் நடத்தி வருகிற போராட்டத்தை இந்தியர்கள் எவ்வளவு அனுதாபத்துடனும் கவலையுடனும் கவனிக்கின்றனர் என்பதைப் பண்டித நேரு சீனருக்குச் சொல்லுவார். ஸ்ரீ நேருவை 52 சங்கங்கள் அழைத்திருக்கின்றன. மற்றும் பல சீன ஸ்தாபனங்களும் தனிப்பட்ட சீனர்களும் ஸ்ரீ நேருவை நன்கு உபசரிப்பர். ஸ்ரீ நேரு லட்சக்கணக்காகக் கூடும் சீன மக்களிடம் இந்தியர்கள் சீனருக்குத் தக்க உதவி செய்ய முடியாமல் தவித்துக்கொண்டிருக்கிறார்கள் என்பதை உணர்த்துவாராக. சீனக் கல்வி ஸ்தாபனங்களும் பெண்களின் கற்பும் அழிக்கப்படுகிற துக்கச் செய்திகளைக் கேட்டு ஒன்றும் செய்யமுடியாத நிலையில் உள்ளோமே என இந்தியர்கள் உள்ளம் பதைத்துக் கைகளைப் பிசைந்துகொண்டிருக்கிறார்கள் என்பதையும் தெரிவித்து வரட்டும். எல்லாவற்றிற்கும் மேலே உரிமையெனும் உண்மைப் போராட்டம் உறுதியாய் வெற்றிபெறும் எனத் தேற்றி வரட்டும்.

### வெட்கக் கேடு

டீன்ஸ்டின் சம்பந்தமாகப் பிரிட்டிஷ் போலீசார் ஐந்து சீனரைக் கைதி செய்திருந்தார்கள். ஜப்பானுக்கும் பிரிட்டனுக்கும் இவர்களால்தான் தகராறு ஏற்பட்டது என்பது கைதி செய்யப் பெற்றவர்கள் மீதிருந்த குற்றச்சாட்டு. இவர்கள் அனைவரையும் ஜப்பானியர் வசம் ஒப்படைத்து, ஒரு கைதிக்கு மட்டும் தற்காப்புகள் வேண்டுமெனவும், மற்ற நால்வரை இஷ்டம் போல் தண்டித்துக் கொள்ளலாம் எனவும் பிரிட்டிஷார் ஜப்பானியரிடம் ஒப்படைத்திருப்பது பெரும் வெட்கக் கேடாயிருக்கிறது. பிரிட்டன் இப்படியும் காட்டிக்கொடுக்க முற்பட்டது மிக மிகக் கேவலம்.

### முனிசிபல் பாடசாலை ஆசிரியர் சங்கம்

காரைக்குடி முனிசிபல் பள்ளிக்கூடங்களின் ஆசிரியர்கள் ஐக்கிய அழைப்புக் கொண்டாட்டம் 20-8-39 ஞாயிறு மாலை 4 மணிக்கு, எஸ். எம். எஸ். ஹைஸ்கூல் மாடியில், முனிசிபல் சேர்மன் ஸ்ரீ ராய. சொக்கலிங்கன் தலைமையில் நடைபெறும். முனிசிபல் கமிஷனர் ஸ்ரீ டி. புருஷோத்தம் ஆசிரியர் யூனியனைத் திறந்துவைப்பார். ஸ்ரீ திருகூடசுந்தரம் பிள்ளை பேசுவார்.

### ஸ்ரீ மு. சித. மு. சிதம்பரம் செட்டியார்

மலேயாவிலிருந்து ஸ்ரீ மு. சித. மு. சிதம்பரம் செட்டியார் ரங்கூன் வந்து சேர்ந்தார். நாளை ரங்கூனைவிட்டுப் புறப்படுவார்.

### இந்தோ பிரிட்டிஷ் வர்த்தக ஒப்பந்தம்

இந்தோ பிரிட்டிஷ் வர்த்தக ஒப்பந்தம் ஆகஸ்டு 15௳ முதல் அமுலுக்கு வந்து விட்டது.

### ரூ 20 000 குறை

இந்தியா, சர்வதேச சங்கத்துக்குச் செலுத்தும் பணத்தில் இந்த வருடம் முதல் ரூ 20,000 குறைக்கப்பட்டிருக்கிறது.

### ரங்கூனில் இந்திய சரக்குகளுக்குத் தீர்வை

இந்தியாவிலிருந்து இறக்குமதியாகும் சர்க்கரை, உப்பு, சிகரெட்டுகளுக்குத் தீர்வை போடுவதென பர்மிய சர்க்கார் தீர்மானித்துள்ளது.

மதுரை முதலிய கோவில்களை ஹரிஜனங்களுக்குத் திறந்துவிட்டதையும் பம்பாய் மதுவிலக்குத் திட்டத்தையும் பாராட்டி கா. காரியக் கமிட்டி தீர்மானம் நிறைவேற்றியுள்ளது.



## காரைக்குடியில் ஆலயப் பிரவேசம்

### சித்திவிநாயகர் கோவிலில் ஹரிஜனங்கள்

### நெருக்கமாய் நின்று உருக்கமாய் வணங்கினர்

### ஸ்ரீ ராமசாமி செட்டியாரின் தாராள உள்ளம்

(நமது நிருபர்)

கொடும் பசியால் வாடுகின்ற ஏழைகளைக் கூப்பிட்டு அவர்களுக்குச் சாப்பாடு போடச்செய்து, பசிதீர அவர்கள் சாப்பிடுவதைப் பார்த்து நாம் ஒருவித ஆனந்தமடைகிறோம். இத்தகைய ஆனந்தம், சென்ற 13-8-39௳ ஞாயிற்றுக் கிழமையன்று ஹரிஜனங்கள் சித்திவிநாயகர் கோயிலுக்குள்ளே பிரவேசித்து, விநாயகருக்கு மிக அருகாமையில் நின்று தரிசித்தபோது ஏற்பட்டது.

செட்டிமார் நாட்டுப் பகுதியில் முதல் முதலாக ஹரிஜனங்கள் நுழையும் பாக்கியத்தைக் காரைக்குடியிலுள்ள சித்தி விநாயகர் பெற்றார். முறைப்படி முதன் முதலாக ஹரிஜன பக்தர்கள் விநாயகரைத் துதி செய்து கொண்டார்கள்!

இந்த சித்திவிநாயகர் கோயில், காரைக்குடி நகரத்தின் செஞ்சைப் பகுதியில் தேவகோட்டைக்குப்போகும்வழியிலே உள்ளது. மிக அழகான கோயில். அண்மையில்தான் சுமார் ஒன்றரை லட்ச ரூபாய் செலவு செய்யப்பட்டுப் புதிப்பிக்கப் பெற்றதாய்ச் சொல்லப்படுகிறது. இக்கோயிலின் சொந்தக்காரர் ஸ்ரீ மெ. செ. ராமசாமி செட்டியார். இவர் காரைக்குடியில் பிரபல பாங்கர். மாஜி முனிசிபல் கவுன்சிலர்.

செட்டிமார் நாட்டிலே பெரும்பாலும் எல்லாக் கோயில்களும் தனிப்பட்டவர்களுக்கே சொந்தம். அதாவது பெரும்பாலும் செட்டியார்களே கோயில்களின் சொந்தக்காரர்களாய் விளங்குகிறார்கள்.

ஸ்ரீ மெ. செ. ராமசாமிசெட்டியார், தமக்குச் சொந்தமான இந்தக் கோயிலில் ஹரிஜனங்களையும் அனுமதிக்குமாறு கோயமுத்தூரிலிருந்து தம்முடைய ஏஜண்டு ஸ்ரீ சுப்பையா பிள்ளைக்கு ஒரு கடிதம் சென்ற 9ந் தேதி எழுதினர். அதில்,

> 'நம்முடைய பிள்ளையார் கோவிலில் ஹரிஜனங்களைத் தெரிசனத்துக்கு அனுமதிக்க வேண்டுமென்று பழ. நாச்சியப்ப செட்டியார் கேட்டுக்கொண்டார்கள். அது போல ஒப்புக்கொண்டிருக்கிறது. அவர்கள்ஹரிஜனங்களைக் கூட்டிக்கொண்டு போகும் போது தானும் கோவிலுக்குப் போயிருந்து சுவாமி தரிசனஞ் செய்து வைக்கவும். குருக்கள் ஏதும் தகராறு செய்தால் வேறு ஒரு ஆளை வைத்துச் செய்து கொள்ளவும். இனிமேல் ஸ்நானம் செய்து சுத்தமாக வரும் ஹரிஜனங்கள் எல்லோரையும் சுவாமி தரிசனஞ் செய்து கொள்ளலாமென்று கோவிலிலுள்ள சிப்பந்திகளுக்கும் தகவல் கொடுத்து அது போல் நடத்திவரவும்,

என்று எழுதியுள்ளார்.

இதன்படி ஸ்ரீ அபிசீனியா பழ. நாச்சியப்பன் சென்ற ஞாயிற்றுக் கிழமை காலை சுமார் 9 மணிக்கு 13 ஹரிஜனங்களை அழைத்துக்கொண்டு மேற்கண்ட சித்திவிநாயகர் கோயிலுக்குள் பிரவேசித்தார். ஸ்ரீ நாச்சியப்பனுடன் ஸ்ரீமான்கள் சுப்பையா பிள்ளை (ஏஜண்ட்), அரு. சோமையா, ஆ. காசிவிஸ்வநாதன், முனிசிபல் உபாத்தியாயர் ராமசாமி, நல்லய்யா ஆகியோருஞ் சென்றிருந்தார்கள்.

கோவிலுக்குள் பிரவேசித்த ஹரிஜனங்களுடைய பெயர்கள் வருமாறு: வி. ஆறுமுகம், எம். வெள்ளச்சாமி, சி. நாராயணன், சி. குப்புசாமி, சி. சுப்பய்யா, வி. மெய்யப்பன், கே. சின்னழகன், எம். பெரியசாமி, என். சங்கரன், பி. ஆகாசம், சித. மெய்யப்பன், மா. மருதமுத்து, எஸ். அழகர்சாமி (முனிசிபல் உபாத்தியாயர், பாரதிபாடசாலை)

#### உருக்கமான காட்சி

மேலே கூறிய ஹரிஜனங்கள் யாவரும் ஸ்நானம் செய்துவிட்டுச் சுத்தமாக வந்திருந்தார்கள். கோயில் குருக்கள் ஸ்ரீ ராஜாமணி அய்யர் ஹரிஜனங்களையும் மற்றவர்களையும் மிக்க மரியாதையுடன் உபசரித்து, விநாயகருக்குத் தீபாராதனை செய்தார். பிறகு விபூதி, சந்தனம், தேங்காய், பழம் ஆகிய சுவாமிப் பிரசாதம் வழங்கினுர்.

ஹரிஜனங்களில் 10 பேர் நீண்ட நேரம் வரைக் கோயிலை விட்டு வரவில்லை. விநாயகர் விக்ரகத்துக்கு முன்னே நின்று வாய்விட்டு உரக்கப் பாடியது எல்லாருடைய மனதையும் உருக்குவதாயிருந்தது. சுற்றுப் பிரகாரம் வந்தபோது அவர்கள் இடத்துக்கு இடம் நின்று ஆச்சரியத்தோடு கண்டு களித்தது பிறருக்கு ஆனந்தத்தைத் தந்தது.

சுவாமி தரிசனம் முடிந்து திரும்பினதும் புகைப் படம் எடுக்கப்பட்டது.

#### பொதுக் கூட்டம்

பின்னர் கோயிலை ஒட்டியுள்ள பூஞ்சோலையில் இது சம்பந்தமாக ஒரு பொதுக்கூட்டம் நடந்தது. ஸ்ரீ. ஆ. காசிவிஸ்வநாதன் தலைமை வகித்தார். ஸ்ரீ பழ. நாச்சியப்பன் பேசும்போது ஹரிஜனங்களை ஆலயத்துக்குள் அனுமதிக்கின்ற உணர்ச்சி இப்போது பரவிவருகிறதென்றும், இது 101வது கோயிலாக திறக்கப்பட்டிருக்கிறதென்றும், கோயில் சொந்தக்காரர் ஸ்ரீ மெ. செ. ராமசாமி செட்டியார் இத் தரும கைங்கரியத்தை மிகத் தைரியமாக இடையூறுகளை யெல்லாம் பொருட்படுத்தாமல் செய்திருக்கிறார் என்றும்பாராட்டிப் பேசினுர் ஸ்ரீ அரு. சோமய்யா பேசுகையில் இந்துக்களாகிய ஹரிஜனங்களைத் தீண்டப்படாதார் என அழைப்பதே மிகக் கொடிதென்று கூறி அழுதே விட்டார். அடுத்தாற்போல் பேசிய ஹரிஜன சகோதரர் ஸ்ரீ எஸ். அழகர்சாமி ஹரிஜனங்களுக்கு இந்த உரிமை வழங்கப் பெற்றது குறித்து மிகச் சந்தோஷப்படுவதாகவும், ஹரிஜனங்களும் இனி சுத்தமாயிருக்கக் கற்றுக் கொள்ள வேண்டும் என்றும் தெரிவித்தார். தலைவர் முடிவுரை கூறுகையில், சித்திவிநாயகர் கோயிலுக்குள் தரிசனத்துக்கு அனுமதித்திருப்பதுடன் எதிரிலுள்ள சுத்தமான தண்ணீரைக் கொண்ட தடாகத்தை ஹரிஜனங்களும் உபயோகித்துக் கொள்ளலாம் என்று ஸ்ரீ மெ. செ. ராமசாமி செட்டியார் செய்துள்ளது மிகவும் போற்றத் தக்கதென்று கூறினர். கூட்டம் பிறகு இனிது கலைந்தது.

இப்படி ஆலயப் பிரவேசம் நிகழ்ந்த தினத்தன்று மிக உத்சாகத்துடன் இருந்து சகல காரியங்களையும் செய்து தந்த குருக்கள் ஸ்ரீ ராஜாமணி அய்யர் மறுநாள் முதல் பூஜைக்கு வாராதபடி செய்யப்பட்டிருப்பது பலருக்கு ஆச்சரியமாயிருந்த போதிலும், அவரை முன்னிட்டு பூஜை நின்று போகாமல், வேறு குருக்களைக் கொண்டு இப்போது பூஜை முறைப்படி நன்றாக நடைபெறுகிறது.



## கப்பல் செய்திகள்

**நாகபட்டினத்திலிருந்து பினங்குக்குப் புறப்படுதல்**

கப்பல்கள் நாகபட்டினத்திலிருந்து மலாய் நாட்டுக்குப் புறப்படும் விபரம் வருமாறு:—

| | |
|---|---|
| ரோனு | 26—8—39 |
| ரஜூலா | 9—9—39 |

**வருதல்**

கப்பல்கள் மலாய் நாட்டிலிருந்து நாகபட்டினத்துக்கு வரும் விபரம் வருமாறு:—

| | |
|---|---|
| ரோனு | 17—8—39 |
| ரஜூலா | 31—8—39 |

## சென்னை மார்க்கெட்

சென்னை, ஆகஸ்ட் 12—

| | |
|---|---|
| சவரன் மொத்தம் | 23-10—3 |
| „ சில்லரை | 23-10—9 |
| பம்பாய் ஆலைத் தங்கம் | 37—0—3 |
| „ தவணை | 37—1—6 |
| முசை தோலா 1-க்கு | 36—9—3 |
| வெள்ளி (ரெடி) | 46—8—0 |
| „ தவணை | 45-11—0 |
| „ 1 ரூபாய் எடை | 0—8—0 |

**ரெங்கூன்**

ஆகஸ். 9—

**நெல்**

| | |
|---|---|
| நசைன் நெல் | 97—98 |
| கல்ஞின் மீடோன் | 97—98 |

**புது அரிசி**

| | |
|---|---|
| பெரியமில் ஸ்பெஷல் ரூ. | 227—0—0 |
| சிறிய மில் நசைன் | 238—0—0 |
| புழுங்கல் அரிசி | 255—0—0 |
| மில்ச்சார் | 257—0—0 |

## சிங்கப்பூர்

சிங்கப்பூர், ஜூலை. 5—

தவணைவட்டி

| | |
|---|---|
| பிரமாதி—ஆனி மீ | 0-3-9 |
| ரப்பர் விலை பவுண்டு 1-க்கு | 28-3/8 |
| ஈயம் விலை பிக்கல் 1-க்கு | $ 113-37½ |
| கொப்பரா காய்ந்தது | $ 3·60 |
| கொப்பரா கலப்பு | $ 3.25 |
| உண்டியல்விலை இந்தியாவுக்கு | 155 |
| „ செய்கோனுக்கு | 204-¾ |

## செய்கோன்

செய்கோன், ஆகஸ். 5—

| | |
|---|---|
| தவணை வட்டி ஆனி மீ | 0-4-0 |
| நெல் விலை பிக்கல் 1-க்கு $ 3·85-லிருந்து | $ 3·90 |

**உண்டியல் விலை**

| | |
|---|---|
| இந்தியாவுக்கு $ 100-க்கு | ரூ. 7 51/4 |
| சிங்கப்பூருக்கு „ | $ 48 |

## உள்ளூர் சினிமாக்கள்

**ஸ்ரீ ராமவிலாஸம்:—**
"சீதாபஹரணம்" என்னும் தமிழ்ப் படம் நடக்கிறது.

**ஸ்ரீ கிருஷ்ணு:—**
"நந்தகுமார்" என்ற தமிழ்ப் படம் நடக்கின்றது.

**ஸ்ரீ நடராஜா**
"காட்டு ராஜன்" என்னும் ஹிந்தி படம் நடக்கிறது.

## மண்டபம் டிப்போவை மூடவேண்டும்

### இலங்கை சர்க்கார் மீது கண்டனம்

காங்கிரஸ் பிரதிநிதியாக ஜவஹர்லால் நேரு இலங்கை சென்று அங்குள்ள நிலைமையை நேரில் அறிந்து தமது ரிபோர்டைக் காங்கிரஸ் காரியக் கமிட்டியிடம் சமர்ப்பித்தார். அவரது ரிப்போர்ட்டைக் காரியக்கமிட்டி பரிசீலனை செய்தபின், ஒரு தீர்மானம் நிறைவேற்றியுள்ளது. அவரது முயற்சியால் இலங்கை வாழ் இந்தியருக்கும் சிங்களவருக்கும் ஏற்பட்டிருக்கும் பரஸ்பர அந்நியோந்நிய பாவத்தைக் கண்டு கமிட்டி அவரைப் பாராட்டியுளது. அங்கு தோன்றியுள்ள தேசிய உணர்ச்சி அவரது விஜயத்தால் விருத்தி யடைந்திருக்கிறது.

காரியக்கமிட்டி இலங்கையில் நிரந்தரமாகத் தங்கியுள்ள இந்தியர்களது உரிமைகளை பாதுகாக்க விரும்புகிறது. அங்கு பரவியிருக்கும் வேலையில்லாத் திண்டாட்டத்தையும் பொருளாதார நிலையையும் கமிட்டி ஆழ்ந்த கவலையுடன் கவனிக்கிறது.

இலங்கை சர்க்கார் நியாயத்துக்கும் சர்வதேச வழக்கத்துக்கும் விரோதமாக நடந்துள்ளனர். இந்தியரை உத்தியோகத்திலிருந்து நீக்கும் சட்டத்தில் மாறுதல்களைச் செய்ய முன்வரவில்லை.

இலங்கைக்கும் இந்தியாவுக்கும் வெகுகாளாய்த் தொடர்பு ஏற்பட்டிருக்கிறது. இந்தியரால் தான் அங்கு செழிப்பு ஏற்பட்டிருக்கிறது. இலங்கையின் கதிமோக்ஷம் இந்தியாவோடு பிணைக்கப்பட்டிருக்கிறது. ஆகவே இரு நாடுகளும் ஒற்றுமையாய் வாழ வேண்டிய அவசியத்தை வற்புறுத்துகிறது.

## ஷண்முகநாதபுரம்

### ஜவஹர் வாசகசாலை ஆண்டுவிழா

10—8—39 மாலை ஜவஹர் வாசகசாலை அங்கத்தினர்களின் பொதுக் கூட்டம் வாசகசாலைத் தலைவர் ஸ்ரீ சித. பெத்த பெருமாள் செட்டியார் தலைமையில் நடைபெற்றது. அண்மையில் வரும் 2 வது ஆண்டுவிழாவுக்கு வேலைகள் பார்க்க கமிட்டிகள் அமைக்கப் பட்டதுடன் 2 வது ஆண்டுவிழாவை 27–8–39ல் நடத்த முடிவு செய்யப்பட்டது. பின்னர் புது வருடத்திற்கு நிர்வாகஸ்தர் தேர்ந்தெடுக்கப் பட்டார்கள்,

தலைவர்: நா. ராமநாதன், உபதலைவர் அரு. இராமநாதன், காரியதரிசி: சொ. மெய்யப்பன், உப. காரியதரிசி தெ ராம. சித. இராமநாதன், பொக்கிஷதார்: சித. பெத்தபெருமாள் செட்டியார், கமிட்டி அங்கத்தினர்கள்: ச. தியாகராஜன், ராம. மெய்யப்பன்; கதி. சிதம்பரம், பழ. கதிரேசன், மு. அ. சேது, மா. வெ. வெ. ராமநாதன்; பாட்மிண்டன் காப்டன், ராம. ராமநாதன். வைஸ்காப்டன், சோம தண்ணிமலை தேர்ந்தெடுக்கப் பெற்றனர்.

## அரியக்குடி

10-8-39 மாலை அரியக்குடி மகாத்மா வாசகசாலை மாளிகையில் தலைவர் ஸ்ரீ சா. பழ. சா. முரு. முருகப்பசெட்டியார் தலைமையில் நிர்வாகசபைக் கூட்டம் நடைபெற்றது.

வாசகசாலைக் கணக்கை ஒப்புக்கொண்டு, மதுரைக்கோயில் திறவுக்குப் பாராட்டு தெரிவித்தது. ஸ்ரீ சித. சா. ரெ. சுப்பிரமணியஞ் செட்டியார் மரணமடைந்தது குறித்து அநுதாபந் தெரிவித்துக் கொண்டது.

இலங்கைக்கு இனி இந்தியர் தொழிலுக்காகப் போகக்கூடாது. மண்டபம் டிபோ மூடப்பட வேண்டும். இலங்கை சர்க்கார் ஆதிக்கத்தில் இந்தியாவின் எல்லையில் இவ்வித டிபோ இருக்க வேண்டும். என்பவை கமிட்டியின் முடிவு.

## முதியோர் கல்விக் கழகம்

முதியோர் கல்விக்கழக் கூட்டம் சிவன் கோவில் முனிசிபல் ஸ்கூலில் 11-8-39௳ நடந்தது. அங்கு வந்துள்ள வயது வந்தோர்க்கு ஷை கல்விக்கமிட்டி மெம்பர்களில் ஸ்ரீமான்கள் A. S. சர்மா, டாக்டர் பீம்ஸிங், A. ராமானுஜய்யங்கார் முதலானவர்கள் வயது வந்தோர் கல்வி யின்மையைப் போக்குதலின் அவசியத்தைப் பற்றி, திருஷ்டாந்தங்களுடன் கதை மூலமாயும் உபந்யாசம் செய்தார்கள்.

முனிசிபல் கமிஷனர் ஸ்ரீ T. புருஷோத்தம் முயற்சியால் நகரசபையின் ஆதரவில் 30–4–39ல் ஓர் முதியோர் இராப்பாடசாலைசிவன்கோவில் முனிசிபல் ஸ்கூலில் (13-வது வார்டு) ஸ்தாபனம் செய்யப்பட்டது. அப்பாடசாலை பிரதி திங்கள் புதன் வெள்ளிக்கிழமைகளில் இரவு 8மணி முதல் 9மணிவரை செவ்வையாக நடைபெற்று வருகிறது இப்பொழுது அப் பாடசாலையில் 25 முதியோர்கள் படித்து வருகின்றனர். அவர்களுக்கு ஸ்லேட், புஸ்தகம், பென்ஸில் இனமாக அளிக்கப்படுகின்றன. அவர்களுக்கு எழுதவும் படிக்கவும் கணிதம் போடவும், இராமாயணம் மகா பாரதக்கதைகள் சுகாதார சினிமாப் பிரசங்கங்கள் முதலியன போதிக்கப்பட்டு வருகின்றது. இதில் வயதுவந்தோர் கல்வித்தேர்ச்சி நன்கு பெற்றவர்களுக்கு உத்தியோகம் வழங்குவதாகவும் உத்தேசிக்கின்றனர். இதனால் கல்வியின்மையைப்போக்கி கல்வி கற்று க்ஷேமமடைய இது ஓர் அரிய சந்தர்ப்பமாகும். இதனைவயது வந்தோர் நழுவ விடக்கூடாது.

## காசி நகரச் சத்திரம்

### 32-ம் நம்பர் டெலிபோன்

ஸ்ரீ காசி நகரச் சத்திரத்தில் டெலிபோன் வசதி ஏற்படுத்தப் பெற்றிருக்கிறது. இந்தியாவில் இதர இடங்களிலிருந்தும் பர்மாவிலிருந்தும் "ட்ரங்" டெலிபோனும் பேசலாம். டெலிபோன் நிர் 32 காசி என உபகாரியதரிசி அரு. க. சொக்கலிங்கம் செட்டியார் அறிவிக்கிறார்.

### காளாப்பூர்

காளாப்பூர் கிராமக் காங்கிரஸ் கமிட்டியின் ஆதரவில் 11-8-39௳ ஒரு பொதுக் கூட்டம் நடந்தது,

ஸ்ரீ கே. கிட்டுவய்யர் காங்கிரஸ் மந்திரி சபையின் ஆலயப்பிரவேச சட்டத்தை மக்களுக்குத் தெளிவுபட எடுத்துரைத்தார்.

## அறிவிப்பு

நானும் இவ்வூர் முரு. நா. முருகப்ப செட்டியாரும் கூட்டாகச் சேர்ந்து முருகப்பா அண்கோ என்னும் ஷேர் புரோக்கர் கம்பெனியை ஆரம்பித்து நடத்த 3—8—38௳ 466 நிம்பராக ரிஜிஸ்டர் செய்திருந்ததில் ஷை கம்பெனியை என் சம்மந்தமன்னியில் ஷை முருகப்ப செட்டியாரே நடத்தி சகல வரவு செலவுகளும் செய்து வந்தார். ஷை கம்பெனியில் என் பெயரையும் சேர்த்து ரிஜிஸ்டர் செய்திருந்ததை 7—3—39ல் கான்சல் செய்யப்பட்டு நான் விலகிக்கொண்டேன்என்பதையும் ஷை கம்பெனிக்கு கொடுக்கவேண்டியது, வாங்கவேண்டியது சகல வரவு செலவுகளையும் ஷை முருகப்ப செட்டியாரே கொடுத்து வாங்கிக்கொள்ளக்கடமைப்பட்டவர் என்பதையும் ஷை கம்பெனி ஆரம்பித்த தேதியிலிருந்து நாளதுவரை எனக்கு அதில் யாதொரு விதமான சம்மந்தமும் கிடையாது என்பதையும் இதன் மூலம் சகலருக்கும் தெரிவித்திருக்கிறேன்.

சி. முரு. அண்ணாமலை செட்டியார்,

11-8-39 காரைக்குடி.





## காரைக்குடி நகரசபை

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

டிருந்தது. திருத்தப்பட்ட வரவு செலவு திட்டத்தில் தொகை ஒதுக்கப்படாமலிருந்தும் ரூ 9558—12—0 கவர்ன்மெண்டு கஜனாவில் 18—3—39௳யில் செலுத்தப்பட்டது. மேற்கூறிய காரணங்களால் 38-39ஷுல் மீதத் தொகை 153—15—11 குறைந்தது. கவுன்சிலின் பொருளாதார நிலைமையைப் பற்றி சம்பாவியமான ஐயுறு ஏற்படாவண்ணம் கவுன்சிலின் பார்வைக்கு மேற்கண்ட விபரங்கள் வைக்கப்பட்டுள்ளன.

வரியைக்கூட்ட சாத்தியமில்லை

1938-39 வருஷத்திய முனிசிபல் கவுன்சிலின் நிர்வாக அறிக்கையும் சம்பந்தமாக ஜில்லா கலெக்டரின் விமர்சனமும் கமிஷனரின் குறிப்பும் படிக்கப்பட்டன. வரியைக் கூட்டுவது இவ்வூர் நிலைமையில் சாத்தியமில்லையென்று தீர்மானிக்கப்பெற்றது.

பாடசாலைகள்

முனிசிபல் பெண்கள் பாடசாலைக்கு நாற்காலி 1, மேஜை 1, டைம்பீஸ் 1 சப்ளை செய்ய அனுமதிக்கப்பட்டது. காந்தி முனிசிபல் ஸ்கூலுக்கு 2 மேஜைகள், 2 நாற்காலிகள், 3 கரும் பலகைகள், 1 ரிகார்டு பெட்டி, 1 மணி சப்ளை செய்ய சாங்ஷன் செய்யப்பட்டது.

கழனிவாசல் முனிசிபல் ஸ்கூலை அமைப்பதற்குத் தனக்குப் பாத்தியமுள்ள 1-வது வார்டு டி. எஸ். 380 நிர், சுமார் 300 குழி விஸ்தீரணமுள்ள காலி இடத்தை வருஷம் ஒன்றுக்கு வாடகை ரூ. 25 வீதம் 20 வருடங்களுக்கு குத்தகைக்கு விடச் சம்மதித்து எழுதியுள்ள ஸ்ரீ கெ. எம். வி. இராமசாமி அம்பலத்தின் கடிதப்படி ஒப்புக்கொள்ளப்பட்டு அனுமதிக்கப்பட்டது. கட்டிடங்கள் முனிசிபாலிடியால் கட்டிக்கொள்ளப்பட வேண்டும்.

ஹரிஜன் காலனியில் முதியவர்க்குக் கல்வி

சிவன் கோவில் முனிசிபல் பள்ளிக்கூடத்தில் நடக்கிறதுபோல் ஹரிஜன் காலனியிலும் முதியவர் பள்ளிக்கூடம் ஒன்றை ஆரம்பிக்க அனுமதி தரப்பட்டது.

இது சம்பந்தமாக சிவன் கோவில் முனிசிபல் பள்ளிக் கூடத்தில் முதியவர்கள், பள்ளிக்கூடம் நன்ருய் நடந்து வருவதாயும்; இதேபோல் ஹரிஜன் காலனியிலும் ஒரு முதியவர் பள்ளிக்கூடம் ஆரம்பிக்கலாம் என்றும்; ஒரு வாரத்தில் 3 நாட்கள் படிப்பு கற்றுக் கொடுக்கப்படும் என்றும் மேற்கண்ட பள்ளிக்கூடத்தை முனிசிபல் ரெஸிடென்ஷியல் ஸ்கூல் தலைமை உபாத்தியாயர் நடத்துவார் என்றும் சிவன்கோவில் முதியவர் பள்ளிக்கூடத்தில் நடக்கும் பாடங்கள் இங்கேயும் நடத்தப்படும் என்றும் கமிஷனர் அறிவித்திருந்தார்.

கோகலே லைப்ரரி

முனிசிபல் கோகலே லைப்ரெரிக்கு ஹிந்தி பாஷா சங்கிரஹா, பகவத்கீதா உபந்யாசங்கள் (டி. எஸ். சர்மா) சில்பஸ்ரீ மாதாந்தர பத்திரிகை ஆகியவைகளை வாங்குவதற்கு சாங்ஷன் தரப்பட்டது.

தாய் சிசு சம்ரக்ஷணைசாலை

செஞ்சை மெய்யப்பா முனிசிபல் தாய் சிசு சம்ரக்ஷணை சாலையில் தங்குவதற்குக் கட்டணம் எதுவும் வசூலிக்க வேண்டியதில்லை யெனத் தீர்மானிக்கப்பட்டது.

வஜா செய்ய வேண்டிய வரிகளும் வாரண்ட் பீசுகளும் வஜா செய்யப்பெற்றன.

மேல ஊருணி டிரஸ்டிகளிடமிருந்து 9 வது வார்டு சர்வே நிர். 49 உள்ள ஸ்தலத்தின் ஒரு பாகத்தை மனோராஜ்யாக வாங்கியதைத் தன்னுல் அங்கீகரிக்க முடியாதென்று கூறியுள்ள இராமநாதபுரம் ஜில்லா கலெக்டரின் கடிதம் ரிகார்டு செய்யப்பட்டது. பார்டிக்கு நோட்டீசு கொடுப்பதெனத் தீர்மானிக்கப்பட்டது.

6 வது வார்டு டி. எஸ். 13ல் கிணறு உள்பட இருக்குமிடத்தை முனிசிபாலிடியைச் சார்ந்ததாக வைத்துக் கொள்ள கவுன்சில் சம்மதிக்கிறதா என்று கேட்டுள்ள தேவகோட்டை சப்-கலெக்டரின் கடிதவிஷயம் ஒத்திவைக்கப்பட்டது.

கிணத்தடி காளியம்மன் ரோடு

கவுன்சில் தீர்மானித்திருப்பது கால்வாயை மட்டும் மூடுவதற்கா அல்லது கிணத்தடி காளியம்மன் கோவில் ரோடை அகலப்படுத்துவதற்காஎன்று விசாரித்துள்ள கலெக்டரின் கடித சம்பந்தமாக,

கலெக்டர் லெட்டர் படிக்கப்பட்டது. அசுத்தமாயிருப்பதால் மூடி, குறுகலாயிருப்பதால் விஸ்தரித்து மூடிய இடத்தை உபயோகித்துக் கொள்வதற்கு 20ஏ, எஸ்டேட் லாண்ட் ஆக்ட்படி கலெக்டரை அனுமதி கேட்பதென்றும் தீர்மானிக்கப்பட்டது.

வரி விதிப்பு

நகரிலுள்ள வீடுகளுக்குப் பெறுமானத் தொகையின் மீது வரி விதிப்பை ஆக்ஷேபித்து ஸ்ரீ லெ. ராம. ராமசாமி செட்டியார் வகையறுப் பேர்கள் அனுப்பியுள்ள மகஜர்பற்றி,

'காரைக்குடி நகரிலுள்ள வீடுகளுக்குப் பெறுமான மதிப்பின் மீது வரி விதிப்பதை ஊர் ஜனங்கள் பலமாய் எதிர்ப்பதாலும் அப்படி வரி விதித்தால் பொதுமக்கள் பெரும்பாலார்க்கு தாங்க முடியாத சுமையாகி விடுமானதால் இவ்வூர் நிலைமையைக் கருதும்பொழுது பெறுமான மதிப்பின் மீது வரி விதிப்பது இயலாதெ தென இக் கவுன்சில் அபிப்பிராயப்படுகிறது. எனவே முன் போலவே வாடகை மதிப்பின் மீது வரி விதிக்க அனுமதிக்கும்படி அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறது'

எனத் தீர்மானிக்கப்பட்டது.

முனிசிபாலிடியைச் சேர்ந்தது

சா. லெ. நா. நாராயணன் செட்டியாரிடமிருந்து காரைக்குடி லேட் யூனியன் போர்டாரால் வசூலிக்கப்பட்ட தொகை பூராவையும் வாபஸ் செய்யவேண்டுமென்றும், செலவு தொகைகளையும் வாபஸ் செய்ய வேண்டுமென்றும் ஜில்லா கலெக்டர் தெரிவித்துள்ள கடிதம் சம்பந்தமாக

ஏற்கெனவே யூனியன் போர்டில் செலவழிக்கப் பட்டதற்காக வசூலிக்கப்பட்டது. ஆதலால் அது முனிசிபாலிடியையே சேரவேண்டியதென்றும் அதை அரசாங்கத்தார் கேட்க உரிமையில்லையென்றும் தீர்மானிக்கப் பெற்றது. —ந. நி.



## மதிப்புரை-'ராஜாஜி முதல் புத்தகம்'

## தம்பீ! வா!

# ப வ ள ம்

குடியானவர்களுக்குச் சீக்கிரமாகவும் சுலபமாகவும் எழுதப்படிக்கச் சொல்லிக்கொடுப்பதற்காக ஸ்ரீ சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் எழுதியுள்ள 'ராஜாஜி முதல் புத்தகம்' வரப் பெற்றோம்.

எந்த ஒரு தேசத்தின் முற்போக்கும் அத்தேச மக்களுக்குள்ள கல்வியறிவைப் பொறுத்துத் தீவிரமாகவோ அல்லது தாமதமாகவோ செல்லும். இந்தியாவின இன்றைய நிலையில் இந்தியர்களிற் பெரும்பாலராகிய கிராமவாசிகள் எழுத்தறிவில்லாதவர்கள் ஆவர். எனவே, இப்படிப்பட்ட கோடிக் கணக்கான மக்களுக்குக் கல்வி புகட்டுவது இன்றியமையாத ஒரு கடன். இக் கடமை விரைவில் ஈடேருவிடின், எண்ணரிய அரிய காரியங்களின் பலனை அநுபவிக்க முடியாமற்போகும். இது பற்றியே ஐக்கியமாகாணம், மத்திய மாகாணம் பம்பாய், பிகார் போன்ற பிற மாகாணங்களிலே உள்ள காங்கிரஸ் சர்க்கார் விரைந்து வயது முதிர்ந்தோர்க்குக் கல்வியறிவு வழங்கிவருகின்றது. கவர்னர்கள் கூட இதில் மிகுந்த அக்கரைகாட்டி வருகின்றார்கள்

நமது பிரதம மந்திரி கனம் ராஜாஜி மதுவிலக்கையும், தீண்டாமை விலக்கையும், விவசாயிகள் கடன் நிவாரணச் சட்டத்தையும் அமுலுக்குக் கொண்டுவருவதில் மிக ஊக்கமாயிருக்கிறாராயினும், கல்வி பரப்பும் இவ்விஷயத்தையும் மறந்தார் இல்லை.

கல்வியறிவற்றவர்களுக்குப் படிப்பு சொல்லித் தரவேண்டும் என்று நாம் உணர்கின்றோம். ஆனல் கிராமத்திலே வசிக்கும் குடியானவர்களிடம் எப்படிப் போகமுடியும், எப்படி அவர்களிடம் உட்கார்ந்து படிப்பு சொல்லித்தர முடியும் என்று திகைக்கின்றோம். இத் தருணத்தில் நம் ராஜாஜி, நம் ஒவ்வொருவர் கையிலும் அமுத சுரபியைப் போன்ற இந்த அரிய புத்தகத்தைக் கொடுத்திருக்கின்றார். படித்தவர்கள் ஒவ்வொருவரும், இப் புத்தகத்தை வாங்கித் தம்முடன் எந்த நிமிஷத்திலும் வைத்துக்கொண்டிருக்க வேண்டும். சந்தர்ப்பம் வாய்த்தே தீரும்; அப்படி வாய்க்கின்ற போதெல்லாம் இப் புத்தகத்தை விரித்துப் பாடஞ் சொல்லித்தரப் படித்த மக்கள் பின் வாங்கப்படாது.

பாடசாலைகளிலும் கல்லூரிகளிலும் கல்வி பயிலுகின்ற பட்டினக்கரை மாணவர்கள் விடுமுறைக் காலத்தில் கிராமாந்தரங்களுக்குப் போகும் போது இப் புத்தகத்தைக் கட்டாயம் எடுத்துச் செல்லவேண்டும். கிராமத்தில் வாழுகிற பாக்கியத்தைப் பெற்ற படித்த மக்கள் வீட்டில் இப் புத்தகம் இன்றியமையாதிருக்க வேண்டும். உத்தியோகஸ்தர்கள் மேஜையிலும் விவசாயிகள் குடிசைகளிலும் இடம் பெற வேண்டிய முக்கிய பொருள் இது.

ராஜாஜி எழுத்துக்களை ஆரம்பித்திருக்கும் விதமே தனி. எளிதில் தெரிந்து கொள்ளக்கூடிய எழுத்துக்களை முதலில் வைத்திருக்கின்றார். உதாரணமாக பவளம் என்ற சொல்லில் வரும் நான்கு எழுத்துக்களும் மிக எளிதில் வரக்கூடியவை. ப என்ற எழுத்து மிகச் சுலபத்தில் வரக் கூடியது. ட என்ற எழுத்தை எழுதும்போது திருப்பியும் கோணலாகவும் எழுதமுடியாதபடி, ப வில் பழக்கிக் கையைத் திருத்துகிறாற் போல வழி செய்திருக்கின்றார். இதே போல எழுத்துக்களும் சொற்களும் படிப் படியாய் வளர்க்கப்படுவதில்தான் ராஜாஜியின் சிறந்த அறிவு புலனுகின்றது.

தமிழர்கள் ஒவ்வொருவரும் இப்புத்தகத்தைக் கொண்டு எழுத்தறிவில்லாதவர்க்குச் சொல்லித் தரவேண்டும் என்பதை ஒரு முக்கியமான கடமையாய்க் கொள்ள வேண்டும். எல்லாரிடமும் இப்புத்தகம் இருந்து விட்டால், ஒருவரிடமே படிப்பு கற்றுக்கொள்ள வேண்டுமென்ற அவசியமில்லை. பட்டிவீரன் பட்டி கிராமத்திலே ஸ்ரீ சௌந்திர பாண்டிய நாடாரிடம் 'பவளம்' என்று எழுதக் கற்றுக் கொண்ட கிராமவாசி, சென்னை ஸ்ரீமதி தருமாம்பாளிடமோ அல்லது ஈரோடு ஸ்ரீ ராமசாமி நாயக்கரிடமோ, அவர்களுடைய ஹிந்தி எதிர்ப்புப் பிரசங்கம் முடிந்ததும் 'கமலம்' என்ற அடுத்த வார்த்தையை எழுதக் கற்றுக் கொள்ளலாம். விலை இரண்டே அணுதான். ஒவ்வொரு படித்த பெண்ணின் கையிலும் அக்ஷய பாத்திரம்போல விளங்கவேண்டிய அக்ஷரபாத்திரம் இது. தற்குறித் தன்மையைத் தலைகாட்ட முடியாதபடி தடுக்க உதவும் நன்னூல் இது.

இரயில் வண்டியிலே போகும் போது, காப்பி ஹோட்டலிலே அரட்டையடிக்கும்போது, பார்க்குகளிலே பொழுது போக்கும் போது, தமிழ் மொழி எழுத்தறிவை ஊட்டப் பயன்படுத்தப் படவேண்டிய இம் முதனூல் எல்லாத் தமிழரிடமும் பரவுவதாக. பொருள் வசதி உள்ளவர்கள் இப் புத்தகத்தை ஏராளமாய் வாங்கி கிராமவாசிகளுக்கெல்லாம் வழங்குவதைவிட பெரும்பணி பிறிதொன்றுமில்லை. தமிழறிவு ஓங்கட்டும்!

ஆசிரியர்: ஸ்ரீ சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

கிடைக்குமிடம்:— ராக்ஹவுஸ் அண்டு சன்ஸ் லிமிடெட், எஸ்பிளனேட், சென்னை—விலை அணு 2.

—ஆ. கா.

மெடிக்கல் இண்டண்ட்

காரைக்குடியிலிருக்கும் இரண்டு தாய் சிசு சம்ரக்ஷணை சாலைகளின் உபயோகத்துக்கு வேண்டிய சாமான்கள் சப்ளை செய்ய மதராஸ் மெடிக்கல் ஸ்டோர் டிப்போ இண்டண்டுரூ. 350 க்கு சாங்ஷன் செய்யப்பெற்றது.

டெய்லி மார்கேட்

கல்லுக்கட்டி டெய்லி மார்கெட்டுக்குப் போகும் பாதைக்கு வடபுறமிருக்கும் காலியிடம் பூராவையும் மாதம் ஒன்றுக்கு வாடகை ரூ. 55/- வீதம் 1948-ம் வருஷம் ஏப்ரல் ௴ 1௳வரை வாடகைக்குவிட சம்மதித்து சிவ. மெ. வகைக்காக ஸ்ரீ சித. வெ. முரு. அருணாசலம் செட்டியார் எழுதியுள்ள கடிதப்படி வாடகைக்கு ஒப்புக் கொள்வதெனத் தீர்மானிக்கப்பட்டது

காங்கிரஸ் காரியக் கமிட்டி

# சுபாஷ் போசுக்கு 3 வருஷம்

## மாகாணத் தலைவர் பதவியும் அரோகரா!

### மத்திய அசெம்பிளியில் முட்டுக்கட்டை?

★

அண்மையில் வார்தாவில் கூடிய காங்கிரஸ் காரியக் கமிட்டி சுபாஷ் சந்திர போஸ் மீது நடவடிக்கை எடுத்துக்கொண்டுள்ள தீர்மானத்தின் முழுவாசகம் பின்வருமாறு:—

'மாகாணங்களில் சத்யாக்ரஹம் மாகாண கமிட்டிகளும் மந்திரிகளும்.' என்ற விஷயங்கள் சம்பந்தமாக சென்ற அ. இ. கா. கமிட்டி கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களை எதிர்த்து, சமீபகாலம்வரை காங்கிரஸ் அக்ராசனராகவிருந்த ஸ்ரீ சுபாஷ் சந்திர போஸ் நடத்திய ஆர்ப்பாட்டங்களைப்பற்றி இக்கமிட்டி மிகவும் வருத்தத்துடனும் கவலையுடனும் ஆலோசனை செய்தது. இது சம்பந்தமாக ஸ்ரீ சுபாஷ் அனுப்பியிருந்த நீண்ட கடிதத்தையும் இக்கமிட்டி தீர்க்க ஆலோசனை செய்தது.

இது சம்பந்தமாக காங்கிரஸ் அக்ராசனர் கூறியிருப்பதிலுள்ள ஒரு முக்கியமான பிரச்னையை ஸ்ரீ சுபாஷ் கவனிக்கவில்லை என்பதை இக் கமிட்டி மிகவும்மனவருத்தத்துடன்தெரிவித்துக் கொள்கிறது. அக்ராசனருடன் தனக்கு அபிப்பிராய பேதமிருந்தாலுங்கூட காங்கிரஸ் அக்ராசனர் என்றஹோதாவில் பிறப்பிக்கும் ஒரு உத்தரவுக்கு காங்கிரஸ் ஊழியர்கள் கீழ்படிய வேண்டுமென்பதை அவர் தெரிந்து கொண்டிருக்கவேண்டும். அதிலும் மாஜி அக்ராசனரான ஸ்ரீ சுபாஷுக்கு இந்த விஷயம் கட்டாயம் புரிந்திருக்க வேண்டும். அக்ராசனரின் தீர்ப்பில் அவருக்கு அபிப்பிராயபேத மேற்பட்டிருந்தால் காரியக் கமிட்டியிடமோ அல்லது அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியிடமோ அவர் அப்பீல் செய்து கொண்டிருக்கலாம். அக்ராசனரின் உத்தரவு ரத்து செய்யப்படாதவரை அதன்படி நடந்தே தீரவேண்டும்.

ஒரு ஸ்தாபனம் நன்ருக வேலை செய்வதற்கு இதுதான் அணிகலன். அதிலும், உலகத்திலேயே சர்வ வல்லமை பொருந்திய ஒரு ஏகாதிபத்யத்தை எதிர்த்து போராடும் ஒரு பெரிய தேசீய ஸ்தாபனத்தில் இந்த நீதி முறை கண்டிப்பாக அனுசரிக்கப்பட வேண்டும். காங்கிரஸ் சட்டத்தை ஒவ்வொருவரும் தனக்கு இஷ்டப்பட்டமுறையில் அர்த்தம் செய்து கொள்ளலாமென்பது சுபாஷின் வாதம் என்று அவருடைய கடிதத்திலிருந்து தெரிய வருகிறது. இந்த முறை ஏற்பட்டு விட்டால், காங்கிரசில் முழு அராஜகம் ஏற்பட்டு ஒவ்வொருவரும் தனக்கிஷ்டப்பட்ட விதத்தில் நடந்து கொள்வார்கள். அதன் பிறகு காங்கிரஸ் ஸ்தாபனமும் தூள் தூளாய் சிதறிப் போவதைத் தவிர வேறு வழியில்லை.

ஸ்ரீ சுபாஷின் இந்தக் கட்டுப்பாடு மீறிய செய்கையை, காங்கிரஸ் காரிய கமிட்டி கவனித்துத் தக்க நடவடிக்கை எடுக்கத் தவறி விட்டால், காரியக் கமிட்டி தனது கடமையிலிருந்து நழுவி விட்டதாக ஆகும்.

ஆகவே, ஸ்ரீ சுபாஷ் சந்திர போஸ், வங்காள மாகாண காங்கிரஸ் கமிட்டியின் அக்ராசனராக இருக்க லாயக்கற்றவர் என்றும், இன்னும் 3 வருஷங்களுக்கு ஆகஸ்டு மாதத்திலிருந்து எந்த காங்கிரஸ் கமிட்டியிலும் பதவி வகிக்கக்கூடாதென்றும், இக்காரியக் கமிட்டி மிகவும் வருத்தத்துடன் தீர்மானிக்கிறது.

ஸ்ரீ சுபாஷ் போஸ், தனது செய்கையின் தவறை உணர்ந்து இந்த ஒழுங்கு நடவடிக்கைக்கு கீழ்படிவாரென்று காரியக்கமிட்டி நம்புகிறது.

பொறுப்புவாய்ந்த இன்னும் அநேக காங்கிரஸ்காரர்களும் கட்டுப்பாட்டை மீறியிருப்பதை இக்கமிட்டி கவனித்தது. அவர்கள் ஸ்ரீ சுபாஷின் தூண்டுகோலினால் தான் கட்டுப்பாட்டை மீறியிருப்பதால், அவர்கள் விஷயத்தில் காரியக் கமிட்டி ஒரு நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளவில்லை. ஆனால், கட்டுப்பாட்டை மீறியவர்கள் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்கும் அதிகாரத்தை அந்தந்த மாகாண கமிட்டிகளுக்கு விட்டுவிடுகிறது. அவசியமென்று கருதினால் அந்தந்த மாகாண கமிட்டிகள் கட்டுப்பாட்டை மீறியவர்களிடமிருந்து சமாதானம் கேட்பார்கள். கட்டுப்பாட்டை மீறியவர்கள் மன்னிப்புக் கேட்டுக் கொள்ளாவிட்டால், மாகாண கமிட்டி கட்டுப்பாட்டை நிலைநிறுத்துவதற்காக நடவடிக்கை எடுத்துக் கொள்ளலாம். கட்டுப்பாட்டை மீறியவர்கள் மன்னிப்புக் கேட்டுக்கொள்வதற்குப் பதிலாக தாங்கள் செய்ததுதான் சரி என்று வற்புறுத்தி வருவார்களானால், அவர்கள் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்கும் அதிகாரம் காங்கிரஸ் அக்ராசனருக்கு அளிக்கப்படுகிறது.

யுத்த நெருக்கடிபற்றி காரியக் கமிட்டி நிறைவேற்றிய தீர்மானத்தின் முழு விவரம் பின் வருமாறு:—

"தற்சமயம் உலகத்தில் நிலவிவரும் நெருக்கடியான நிலைமையைப்பற்றியும் வரப்போகும் யுத்த ஆபத்தைப்பற்றியும் இக்கமிட்டி தீர்க்க ஆலோசனை செய்தது.

"ஜனநாயகத்தையும், சுதந்திரத்தையும் நிலைநிறுத்த விரும்புகிற மக்களிடம் இக்கமிட்டி தன்னுடைய அனுதாபத்தை காட்டுகிறது. காங்கிரஸானது பல தடவைகளாக ஐரோப்பாவிலும், ஆபிரிக்காவிலும் கீழ்க்கோடியிலும் சர்வாதிகாரிகள் படையெடுப்பை பலமாக பல தடவைகள் கண்டித்திருக்கிறது; ஸ்பெயினிலும், செகோஸ்லோவேகியாவிலுமுள்ள ஜனநாயக ஆட்சியை காட்டிக் கொடுத்த பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்தின் போக்கையும் கண்டித்திருக்கிறது. யுத்தம் ஏற்பட்டால் காங்கிரசின் கொள்கை எப்படியிருக்க வேண்டுமென்பது பற்றி ஏற்கனவே முடிவு செய்திருக்கின்றது. இந்தியா மீது எவ்விதமான யுத்தத்தையும் புகுத்தப்படுவதை முழு பலத்துடனும் எதிர்ப்பதில் தனது உறுதியை ஏற்கனவே தெரிவித்து விட்டது. காங்கிரஸின் இந்தக் கொள்கையை பின்பற்ற இக்கமிட்டி கடமைப்பட்டிருக்கிறது. ஏகாதிபத்ய நோக்கங்களை சாதித்துக் கொள்வதற்காக இந்தியாவின் திறமையையும் வசதியையும் உபயோகித்துக் கொள்ளச் செய்யப்படும் எந்த முயற்சியையும் இக்கமிட்டி பலமாக தடுக்கத்தான் செய்யும்.

பிரிட்டிஷசர்க்கார் இதுவரை அனுஷ்டித்துவரும் கொள்கையிலிருந்து அவர்கள் பிறநாடுகளின் சுதந்திரத்தையும் ஜனநாயகத்தையும் காப்பாற்றுவதற்குத் தயாராயில்லையென்பது நன்கு தெரியவருகிறது. இந்த உன்னத நோக்கங்களை பிரிட்டிஷ் சர்க்கார் எந்த நிமிஷத்திலும் காட்டிக் கொடுத்துவிடும் என்பதும் நமக்கு நன்கு தெரிய வருகிறது. இந்தியாவுக்கே ஜனநாயக சுதந்திரம் அளிக்கப்படாத இப்பொழுதுள்ள நிலைமையில் நாம் யுத்தத்தில் கலந்துகொள்ள முடியாது. 1939 ஆம் வருஷம் மே மீ 1ந் தேதியன்று கல்கத்தாவில் நடந்த அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியில் காங்கிரசின் இந்தக் கொள்கை மீண்டும் வற்புறுத்தப்பட்டது. இந்தியாவிலிருந்து அந்நியநாடுகளுக்கு சைன்யம் அனுப்பப்படுவதில் தனது எதிர்ப்பை தெரிவித்துக் கொண்டிருக்கிறது.

காங்கிரசின் இந்த தெளிவான அபிப்பிராயத்தை கொஞ்சமேனும் பொருட்படுத்தாமல் பிரிட்டிஷ் சர்க்காரானது இந்தியத் துருப்புகளை ஈஜிப்த்து, சிங்கப்பூர் போன்ற அந்நிய நாடுகளுக்கு அனுப்பியிருக்கிறது; இன்னமும் அனுப்பிக்கொண்டு வருகிறது. இப்பொழுதுள்ள யுத்த நிலைமை ஒருபுறமிருக்க, மத்திய அசெம்பிளியின் சம்மதமன்னியில் இந்தியத் துருப்புகளை அன்னிய நாடுகளுக்கு அனுப்பக் கூடாதென்று முன்னமேயே மத்திய அசெம்பிளி தீர்மானம் செய்திருக்கிறது.

காங்கிரசின் அபிப்பிராயத்தையும் மத்திய அசெம்பிளியின் அபிப்பிராயத்தையும் பிரிட்டிஷ் சர்க்கார் புறக்கணித்துவிட்டது. பிரிட்டிஷ் சர்க்காரின் இந்தச் செய்கை இந்தியாவை யுத்தத்தில் மாட்டிவிடும். தவிரவும் மத்திய அஸெம்பிளியின் ஆயுளை இன்னும் ஒரு வருஷத்துக்கு நீடித்துவிட்டது. பிரிட்டிஷ் சர்க்காரின் இந்த தீர்மானங்களை இக்காரியக் கமிட்டி ஏற்றுக்கொள்ள முடியாது. பிரிட்டிஷ் சர்க்காரின் இந்த முடிவுகளில் நம்மை சம்மந்தப்படுத்திக் கொள்ளாதது மன்னியில் காங்கிரசின் இது சம்பந்தமான கொள்கையை அமுலுக்குக் கொண்டுவரத் தேவையான நடவடிக்கைகளையும் நாம் எடுத்துக்கொள்ள வேண்டும்.

ஆகவே, மத்திய அசெம்பிளியிலுள்ள எல்லா காங்கிரஸ் மெம்பர்களும் இப்பொழுது கூடப்போகும் மத்திய அஸெம்பிளிக்குச் செல்லக்கூடாது.

#### மாகாண சர்க்கார்கள்

மாகாண சர்க்கார்கள் பிரிட்டிஷ் சர்க்காரின் எந்த யுத்த ஏற்பாட்டுக்கும் உதவி செய்யக்கூடாது; காங்கிரசின் இந்தக் கொள்கையை மனசில் வைத்துக் கொண்டு இதன் பிரகாரம் நடந்துகொள்ளவேண்டும், இந்தக் கொள்கையை பின்பற்றுவதின் காரணமாக காங்கிரஸ் மந்திரிகள், தாங்களே ராஜினாமாச் செய்ய வேண்டி வந்தாலோ, அல்லது ராஜினாமாச் செய்ய நிர்ப்பந்தப் படுத்தப் பட்டாலோ, அந்த நிலைமைக்கும் தயாராகவிருக்கவேண்டும்.

யுத்த சமயத்தில், இந்தியாவானது விமானங்களாலோ அல்லது வேறு விதமாகவோ தாக்கப்பட்டால், தற்காப்புக்கான முறைகளுக்கு ஏற்பாடு செய்யலாம். மாகாணங்களிலுள்ள பொறுப்புள்ள மந்திரிகள் இம்மாதிரியான தற்காப்பு முறைகளை அனுசரிப்பதற்கு ஊக்கமளிக்க இக்கமிட்டி தயாராகவிருக்கிறது. ஆனால் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் ஆதிக்கத்தின் கீழ் தற்காப்பு என்ற போர்வையை போர்த்திக்கொண்டு யுத்த ஏற்பாடுகள் செய்து வருவதை இக்கமிட்டி ஆதரிக்காது.

## மதிப்புரை

### தமிழ்நாடு டைரக்டரி—1939

[ஆசிரியர் ஸ்ரீ எம். வெங்கடாசலம். கிடைக்குமிடம்: தமிழ்நாடு டைரக்டரி பப்ளிஷிங் கம்பெனி, கல்லுக்கட்டி, காரைக்குடி. விலை ரூ 1—8—0]

ஆங்கிலத்திலே மிக அரிய டைரக்டரிகள் வெளிவந்து கொண்டிருக்கின்றன. எந்தப் பொது விஷயத்தைத் தெரிந்து கொள்ள விரும்பினாலும் ஆங்கில டைரக்டரிகள் பெரும்பாலும் பயன் தருகின்றன. ஆங்கிலம் அறியாத மக்கள் எளிதில் பொது விபரங்களைத் தெரிந்து கொள்ளுகின்றாற்போல வசதிகள் எதுவும் இல்லை. இக் குறையினை தமிழ் டைரக்டரி ஒன்று வெளியிடுதல் மூலம் நிவர்த்திக்க வேண்டும் என அன்பர் ஸ்ரீ வெங்கடாசலம் அபிப்ராயப்பட்டு ஓரளவு முயன்றுள்ளது பாராட்டத் தக்கதாகும்.

தமிழில் டைரக்டரி வெளியிட வேண்டும் என்ற ஆர்வத்துடனும் அவசரத்துடனும் இதனை ஸ்ரீ வெங்கிடாசலம் வெளியிட்டிருக்கிறார். ஆதலின் இதைப் பற்றி விசேஷமாகப் பாராட்டிச் சொல்லுவதற்கு எதுவும் இல்லாத நிலையிலிருக்கிறது. எளிதில் சாதாரணமாகக் கிடைக்கும் சர்வ சாதாரணமான சிற்சில விஷயங்களே இதில் தரப்பட்டுள்ளன. என்றாலும் தமிழ் டைரக்டரி வெளி வரவேண்டும் என்பதை உணர்த்தித் தமிழ் மக்களை ஊக்குவதற்கு இது பயன்படும்.

## சிவகெங்கை

### கல்லூரணி கிராம அரசியல் மகாநாடு

சிவகெங்கை தாலூகாவிலுள்ள கல்லூரணியில் 13-8-39 க்கு பிரமாதி ஆடி 28உ ஞாயிற்றுக்கிழமை, கல்லூரணி கிராம 3 வது அரசியல் மகாநாடு நடைபெறும். மகாநாட்டுக்கு ஸ்ரீ எ. ரெங்கசாமி அய்யங்கார் தலைமை வகிப்பார். மகாநாட்டை ஸ்ரீ சிவ சுப்பிரமணியம் திறந்து வைப்பார். கொடியேற்றுபவர் ஸ்ரீமதி கமலா சிவ சுப்பிரமணியம். ஸ்ரீ கருமுத்துசிவலிங்கம் ராஜன் பாபுவின் படத்தைத் திறந்துவைப்பார். கமலா நேருவின் படத்தை ஸ்ரீ வ. க. வ தங்கசாமி பாரதி திறந்துவைப்பார்.

குறிப்பு:— மானமதுரையிலிருந்து மதுரை ரயில்வே லயனில் திருப்பாசேத்தி ரயில்வே ஸ்டேஷனிலிருந்து வடக்கே 3 மைல் தூரத்திலுள்ளது கல்லூரணி கிராமம். ரோடு வசதி உண்டு.





## சென்னை ரேடியோ

### ஆகஸ்ட் 17உ வியாழன்

5-00 கர்நாடக வாத்திய கோஷ்டி காம்போதி.
5-10 ஸ்ரீமதி ஸ்வர்ணசரஸ்வதி வாய்ப்பாட்டு.
6-00 பஜனை அ. இ. ரே. வித்வான்கள்.
6-20 'சாஸ்திரி' பேர்பெற்ற செய்யுள்கள்.
6-35 நட்சத்திரங்கள் பாடுகின்றன. ஸ்ரீமதிகள் ராமதிலகம், டி. கோடிரத்னம், ஸ்ரீரஞ்சனி.
6-45 ஸ்ரீமதி ஸ்வரணசரஸ்வதி.
7-30 'மீராபாய்' ஒரு சங்கீத நாடகம், பிரஸிடென்ஸி அமெச்சூர்ஸ்.
8-45 கர்நாடக வாத்தியக் கோஷ்டி வாசஸ்பதி.
9-30 ஸ்ரீ டி. எம். மாணிக்க பாகவதர் வாய்ப்பாட்டு.

### 18உ வெள்ளி

5-00 ஸ்ரீமதி பங்களூர் நாகரத்னம்மாள் வாய்ப்பாட்டு.
6-45 கிராமபோன் ரிகார்டுகள்.
7-15 'கிழக்கத்திய நாடுகளும் ஜனநாயகமும்' ஸ்ரீ கே. ராஜகோபாலன் தமிழில் பேசுவார்.
7-40 ஸ்ரீ வி. சேதுராமய்யா பிடில்.
8-15 இளவரசி மங்கு தம்புரான் வாய்ப்பாட்டு. செம்பை வைத்தியநாத பாகவதர் பிடில்.
9-00 கர்நாடக வாத்தியக் கோஷ்டி, ராகமாலிகை.

### 19உ சனி

5-00 தேனுவகொண்ட ஸ்ரீசுப்பராவ் வாய்ப்பாட்டு.
5-50 கர்நாடக வாத்தியக் கோஷ்டி பிலஹரி.
6-45 'பகவானே' தமிழ்நாடகம் எழுதியவர் ஸ்ரீ வி. எஸ். ராமகிருஷ்ணன்.—தயாரித்தவர் ஸ்ரீ மணி.
7-00 தேனுவகொண்ட ஸ்ரீசுப்பராவ்.
7-30 ஸ்ரீமதி கே. ரத்னம்பாள் வாய்ப்பாட்டு.
8-15 அ. இ. ரே. வித்வான்—ஜலதரங்கம்.
8-25 ஸ்ரீமதி கே. ரத்னம்பாள்.
8-55 கல்லூரியில் வாழ்க்கை ஆரம்பமாகிறது. (இங்கிலாந்து) ஸ்ரீ எஸ். கே. செட்டூர்.

### 20உ ஞாயிறு

5-00 ஸ்ரீ வி. எம். கிருஷ்ணப்ப முதலியார் வாய்ப்பாட்டு.
5-30 கர்நாடக வாத்தியக் கோஷ்டி கௌளி பந்து.
5-35 சென்னை சேவாசதனம் கோஷ்டி சங்கீதம்.
6-15 ஸ்ரீ டி. எஸ். டி. சாரி வாய்ப்பாட்டு.
7-45 இசைத்தட்டு.
8-45 மாஸ்டர் ஸ்ரீ காந்தம் வாய்ப்பாட்டு.
8-55 அண்ணாமலை சர்வகலாசாலை டாக்டர் பி. நாராயணசாமி நாயுடு.

### 21உ திங்கள்

6-00 குமாரி வசந்தா வாய்ப்பாட்டு.

## திருச்சி ரேடியோ

### ஆகஸ்ட் 17உ வியாழன்

6-00 கிராமாந்தா நிகழ்ச்சிகள்
6-30 சேலம் ஸ்ரீ ஜி. தேசிகன் வாய்ப்பாட்டு.
7-00 ஸ்ரீ எல். கிருஷ்ணசாமி பாரதி அடிமை மனப்பான்மை என்பதுபற்றி பேசுவார்.
7-15 ஸ்ரீமதி லலிதா வேங்கட்ராமன்-வீணையும் வாய்ப்பாட்டும்.
7-45 சேலம் ஸ்ரீ ஜி. தேசிகன்.
8-30 இசைத் தட்டு.
8-45 ஸ்ரீமதி லலிதா வெங்கட்டராமன்.
9-15 செய்திகள்.

### 18உ வெள்ளி

6-00 இரங்கற்பா 'மாமரம்' ஒரு விவாதம் (இசைத் தட்டு)
6-30 ஸ்ரீமதி எம். பத்மாவதி வாய்ப்பாட்டு.
7-00 ஸ்ரீ எபேன் பாக்யம் ராஜா (ஊர்ப் பேச்சு)
7-15 மன்னார்குடி ஸ்ரீ கோபால பிள்ளை-வாய்ப்பாட்டு.
8-00 ஸ்ரீமதி எம். பத்மாவதி.
8-30 இசைத் தட்டு
8-45 மன்னார்குடி ஸ்ரீ கோபால பிள்ளை.
9-15 செய்திகள்.

---

6-00 ஸ்ரீ ப்ராயக நரசிம்ஹ சாஸ்திரி சிந்துகள்.
6-45 திருக்கோகர்ணம் ஸ்ரீமதி டி. என். மாணிக்கம்—வாய்ப்பாட்டு.
7-15 'லக்ஷ்ய லக்ஷணம்' ஸ்ரீ எ. ஜி. வெங்கடாச்சாரி தமிழில் பேசுவார்.
7-30 திருக்கோகர்ணம் ஸ்ரீமதி டி. என். மாணிக்கம்.
8-30 ஸ்ரீ வி. வெங்கட்டராம ஐயர் புல்லாங்குழல்.

### 22உ செவ்வாய்

5-00 ஸ்ரீமதி வி. ராதாமணியும், வி. கமலாவும்—வாய்ப்பாட்டு.
5-45 ஸ்ரீ கே. வெங்கட்ரமண ராவ்—ரிகார்டுகள்.
6-40 அ. இ. ரே. பாடகர்—அஷ்டபதி.
6-45 'உபநயனம்' தமிழ்விசேஷ நிகழ்ச்சி—எழுதியவர் ஸ்ரீ ஆர். கிருஷ்ணமூர்த்தி.
7-00 ஸ்ரீவி.சுப்ரமண்யம் வாய்ப்பாட்டு.
8-05 ஸ்ரீ கரூர்—சின்னச்சாமி பிடில்.

### 23உ புதன்

5-00 ஸ்ரீமதி ஜெயந்தி வாய்ப்பாட்டு.
5-30 ஸ்ரீ கே. வெங்கடசுப்பையா நாகசுரம்.
6-00 ஸ்ரீ பாளையூர் கே.வெங்கட்ராமய்யர்—வாய்ப்பாட்டு.
7-15 விவசாயமும் வருமானமும் ஸ்ரீ கே. வி. ராமகிருஷ்ணன் தமிழில் பேசுவார்.
7-30 டாக்கா ஸ்ரீ ராமமூர்த்தி வாய்ப்பாட்டு.
8-30 ஸ்ரீ பி. துரையப்ப பாகவதர் கோட்டு வாத்தியம்.
8-55 'கவிதை' என்ற பொருள் பற்றி விவாதிப்பார்கள்.

### 19-உ சனி

6-00 கிராமாந்தா நிகழ்ச்சிகள்.
6-30 ஸ்ரீமதி சுந்தரி வாய்ப்பாட்டு.
7-00 'உடலமைப்பின் லக்ஷண லக்ஷ்யங்கள்' ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார்.
7-15 தந்தையும் மகனும் ஒரு நாடகம். எழுதித் தயாரித்தவர் ஸ்ரீ என். வாசுதேவ்.
7-35 திருவாரூர் ஸ்ரீ டி. வைத்யநாதய்யர் வாய்ப்பாட்டு.
8-00 ஸ்ரீமதி சாஸ்வதி வாய்ப்பாட்டு.
8-30 இசைத்தட்டு.
8-45 திருவாரூர் ஸ்ரீ டி. வைத்தியநாத ஐயர்.
9-15 செய்திகள்.

### 20-உ ஞாயிறு

6-00 கிராமாந்தா நிகழ்ச்சிகள்.
6-30 மைசூர் சங்கீத சாஸ்த்ர ரத்ன ஸ்ரீகோ.வாசுதேவாச்சார்யா—வாய்ப்பாட்டு
7-00 ஸ்ரீ எஸ். வெங்கட்ராமன் 'சட்டம் இயற்றுவது' என்பது பற்றி பேசுவார்.
7-15 ஸ்ரீமதி எஸ். வித்யா-வீணையும் வாய்ப்பாட்டும்.
7-45 சங்கீத சாஸ்த்ர ரத்ன ஸ்ரீ. கே. வாசுதேவாச்சார்யா,
8-30 இசைத்தட்டு.
8-45 ஸ்ரீமதி எஸ். வித்யா.
9-15 செய்திகள்.

### 21உ திங்கள்

6-00 கிராமந்தா நிகழ்ச்சிகள்.
6-30 திருச்சி சகோதரர்கள். வாய்ப்பாட்டு.
7-00 'வீடு கட்டுதல்' ஸ்ரீ எ. ரஞ்சிதம்.
7-15 ரயில்வே கேட்டில் ஒரு விசேஷ நிகழ்ச்சி-ஏற்படுத்தியவர் ஸ்ரீ ஜானகிராம்.
7-25 ஸ்ரீமதி நீலாம்மாள் கடம்பி வீணையும், வாய்ப்பாட்டும்.
8-00 திருச்சி சகோதரர்கள்.
8-30 இசைத்தட்டு.
8-45 ஸ்ரீமதி நீலம்மா
9-15 செய்திகள்.

### 22உ செவ்வாய்

6-00 கிராமாந்தா நிகழ்ச்சிகள்.
6-30 ஸ்ரீ டி. புட்டுசாமி ஐயா வாய்ப்பாட்டு.
7-00 'ஆனய்யா' ஸ்ரீ டி. எஸ். சபேச ஐயர்.
7-15 மன்னார்குடி ஸ்ரீமதி கே. சாவித்திரி அம்மாள் கோட்டு வாத்தியத்துடன் வாய்ப்பாட்டு.
8-00 ஸ்ரீ புட்டுசாமி ஐயா.
8-30 ஸ்ரீமதி கே. சாவித்திரி அம்மாள்.
8-45 ஸ்ரீ டி. புட்டுசாமி ஐயா.
9-15 செய்திகள்.

### 23உ புதன்

6-00 கிராமாந்தா நிகழ்ச்சிகள்.
6-30 ஸ்ரீமதி வி. எஸ். சாரதாம்பாள் வாய்ப்பாட்டு.
7-00 'தேவவிரதம்' ஒரு பெரும் துறவுபற்றிய கதை, எழுதியவர்ஸ்ரீ டி. அய்யம்பெருமாள் கோனார்.
7-15 செஞ்சி ஸ்ரீ லக்ஷ்மய்யா நாயுடு புல்லாங்குழல்.
8-00 ஸ்ரீமதி வி. எஸ். சாரதாம்பாள்—
8-30 இசைத்தட்டு.
8-45 செஞ்சி ஸ்ரீ லக்ஷ்மய்யா நாயுடு.
9-15 செய்திகள்.

## அழகாபுரி கொலை வழக்கு

### எதிரிகளுக்கு விடுதலை

பள்ளத்தூர் போலீஸாரால் கொலைக் குற்றஞ் சாட்டப்பட்டிருந்த அழகாபுரி அழகப்ப செட்டியாரும், மற்றும் அவரது தர்வான்களான 9 பஞ்சாபியர்களும், 10-9-39 இராமநாதபுரம் செஷன்ஸ் ஜட்ஜால் விடுதலை செய்யப் பட்டனர்.

வாதி தரப்பு வழக்கின் சாரமாவது: முதல் எதிரிக்கும், அவரது சகோதரர் (கொலையுண்ட) வெங்கிடாசலம் செட்டியாருக்கும், பண விஷயமாக மனஸ்தாபமிருந்து வந்ததாயும், சென்ற 20-2-38ந் தேதி முதல் எதிரியின் தூண்டுதலின் பேரில் மற்ற எதிரிகள் சேர்ந்து டிை வெங்கிடாசலம் செட்டியாரை அழகாபுரியிலுள்ள அவரது வீட்டில் கோடாரியால் தாக்கி கொலை செய்ததாயும் வழக்கு.

வழக்கு 1-ந் தேதி முதல் 6 தினங்கள் நடைபெற்றது. ஹைகோர்ட்டைச் சேர்ந்த பார்சி தம்பாஜி இவ் வழக்கிற்கென வரவழைக்கப் பட்டிருந்தார். வாதி தரப்பில் 29 சாக்ஷிகள் விசாரிக்கப் பட்டனர். அஸெஸர்கள் யாவரும் எதிரிகளைக் குற்றவாளிகளல்லவென கொடுத்த அபிப்பிராயத்தை ஏற்றுக்கொண்ட நீதிபதி, இன்று மேற்கண்டவாறு தீர்ப்பு அளித்தார்.

வாதி தரப்பின் பப்ளிக் பிராஸிகியூடர் ஸ்ரீ இ. பெரியநாயகமும், 1—வது எதிரிக்காக அட்வகேட் ஸ்ரீ எஸ். ராமானுஜமும், இதர எதிரிகளுக்காக வக்கீல் ஸ்ரீ எம். துரைசாமி பிள்ளை, அட்வகேட் ஸ்ரீ எ. பி. முகமது சுல்தான் ஆகியோரும் ஆஜராயினர்.

### ரேடியோச் செய்திகள்

ரேடியோ பிராட்காஸ்ட் மூலம் வைத்தியரில்லாத கப்பல்களிலும் வனாந்தரங்களிலும் தீவுகளிலும் வியாதிகள் போக்கடிக்கப் படுவது சர்வ சாதாரணமாய் விட்டது.

தரையிலிருந்து ரேடியோ ஸ்விச்சுகள் மூலம் மிக உயரே பறக்கும் ஆளே இல்லாத ஆகாயக் கப்பல்கள் யுத்த சமயத்தில் அதிக உபயோகத்துக்கு வரும்.

வருகிற ஏப்ரல் மாதம் முதல் எல்லா ஸ்டேஷன்களிலும் டில்லி சென்டரிலிருந்து வரும் செய்திகளையே வெளியிடப்படும். ஆகவே செய்திகள் மற்ற ஸ்டேஷன்களில் மாறுதலடையாது.

செப்டம்பர் மாதம் முதல் ஜெர்மனி பிரஞ்சு பாஷையிலும் பிராட்காஸ்ட் செய்யும்.

இங்கிலாந்தில் டெலிவிஷன் நமக்கு ரேடியோ எப்படியோ அப்படி சகஜமாய்விட்டது. இங்கிலாந்தில் 80 லட்சம் ரேடியோ செலவாகின்றன. 100க்கு 74 வீடுகளில் ரேடியோ இருக்கிறது.

நியூஜிலாந்திலும் டென்மார்க் ஸ்வீடன் தேசங்களிலும் அநேகமாய் எல்லா வீடுகளிலும் ரேடியோ உண்டு.

அமெரிக்காவில் ரேடியோவுக்கு லைசென்ஸ் கிடையாது!

ஜெர்மெனி டிசம்பரில் டெலிவிஷன் சர்விசை நடத்த ஆரம்பிக்கும்.

### புதிய கவர்னர்

லார்டு எர்ஸ்கினுக்குப் பிறகு கவர்னராக நியமிக்கப்பட்டிருக்கும் கேப்டன் சர் ஆர்தர் ஹோப் நவம்பர் 17உ பதவி ஏற்றுக்கொள்வார்.

# சினிமாப் பகுதி

★

### விமோசனம்

சமீபத்தில் முதலாவதாக சென்னையில் வெளியாகும்.

### குன்னக்குடி வெங்கட்டராமய்யர்

டிரினிடி பிக்சர்ஸின் சந்திரகுப்தாவுக்கு சங்கீதம் டைரக்ட் செய்வார்.

### வீர கர்ஜனை

எம். ஏ. ராஜாமணி நடித்த ஸ்டண்ட் படம் வெகு சீக்கிரத்தில் வெளியாகும்.

### மன்மத விஜயம்

"மன்மத விஜயத்தில்" சென்னை பிரபல அமெச்சூர் நடிகர் சுப்ரமணியம் நன்கு நடித்திருக்கிறாராம்.

### சுந்தரம் சௌண்ட் ஸ்டுடியோ

வடநாட்டுப் பெண்ணான பத்மாவதி ஷாலிக்ராம் தெலுங்கு உஷாவில் நடிக்கிறார்.

### மாடர்ன் தியேட்டர்

"சத்தியவாணி" 'மாணிக்கவாசகர்' "மகாநந்தர்" வெள்ளித்திரைக்குத் தயாராகின்றன.

### கோவை சென்ட்ரல்

"பிரகலாதன்" "சதிமுரளி" "பூலோகரம்பை" "ரிஷியசிருங்கர்" "பரசுராமாவதாரம்" தயாராகி வருகின்றன.

### பிரிமியர் ஸினிடோன்

வாமனாவதாரம் முடிந்ததும் "வள்ளுவன்" கதையைத் தந்து "வள்ளுவன் பிலிமை உலகினுக்கீந்த வான்புகழ் பிரிமியர் சினிடோன்" என விளங்குமாம்! சதிகன்யா இங்குதான் பிடிக்கப்படும்.

### பாபுராவ் படேல்

பிலிம் இந்தியா ஆசிரியர் பாபுராவ் படேலும் அகில இந்திய சினிமா சங்க காரியதரிசி ஹிர்லெகாரும் ஜெர்மனி சென்றுள்ளனர்.

### தெலுங்கு வரவிக்ரயம்

சென்னையில் பலர் கண்டு களித்து புகழ்கின்றனர். இது ஹிந்து கல்யாண வரதக்ஷிணைக் கொடுமையை நன்கு எடுத்துக் காட்டுகின்றதாம்.

### சினிமாவுக்கு டாட்டாவின் பணம்

ஸாகர், ஜெனரல் பிலிம்ஸ் இரண்டும் நேஷனல் பிலிம்ஸ் என்ற பெயருடன் ஐக்கியப் பட்டிருக்கின்றன. அதில் டாட்டா குடும்பத்தினர் பணம்போட்டிருக்கின்றனர்.

ரம்பையின் காதலுக்கு வெள்ளி விழா நடக்கப்போகிறது.

சக்தி மூவிடோன் "மாய உலகம்" எனும் படத்தைத் தயாரிக்கிறது.

### இளங்கோவன்

"அம்பிகாபதி" "திருநீலகண்டர்" முதலிய படங்களுக்குக் கதையமைப்பும் வசனமும் எழுதிய இளங்கோவன் ஹாலிவுட்டுக்கு ஜனவரியில் போகிறாராம். இங்கிலாந்திலும் "எல்ஸ்ட்ரீ" சென்று பல விஷயங்கள் கற்று தமிழ் சினிமாவைச் சீர்படுத்த முயலுவாராம்.

### சாந்த துளசிதாஸ்

இது சமீபத்தில் பண்டித மாளவியா போன்றவர்களால் பார்க்கப்பட்டு வெகுவாய் புகழப்பட்டிருக்கிறது. இந்தியாவில் இதுவரை வெளியான படங்களில் இது தலைசிறந்து விளங்கும் எனக் கருதப்படுகிறது.

ராமாயணம் பண்டிதரிடம் அகப்பட்டுக் கொண்டு தவிப்பது நரஹரி சாஸ்திரிக்குச் சகிக்கவில்லை. அவர் ரம்போலா எனும் தெய்வீகக் குழந்தையை கங்கைக் கரையில் கண்டெடுத்து வளர்க்கிறார். ரம்போலா அண்டை வீட்டு ரத்னாவுடன் இணைபிரியாமல் விளையாடி அவளையே மணந்து அவள் மாயவலையில் மூழ்கி அவள்மீது கவி பாடுகிறான். சாஸ்திரி ரத்தினத்தைக் கோபித்து புருஷனது மோகத்தை ராமர் மீது செலுத்தும்படி செய்யச் சொல்லுகிறார்.

இடியும் மின்னலும் மழையும் புயல் காற்றும் ரம்போலாவை சூழ்கின்றன. கங்கையில் வெள்ளம் புரண்டோடுகிறது. ரத்னாவைத் தேடி ஓடுகிறான்.

ரத்னா ரம்போலாவைக் கோபித்து ராமனைத் துதிக்கச் சொல்லுகிறாள். ரம்போலா துளசிதாசாக மாறி சன்யாசம் பூண்டு ராமாயணத்தை ஹிந்தியில் பாடுகிறார்.

கேசவராவ் தேதே துளசிதாஸ் பாகத்தை நன்கு நடிக்கிறார்.

### ஜெமினி பிக்சர்ஸ்

ஜெமினி பிக்சர்ஸ்தான் இனி மதராஸ் யுனைடெட் ஆர்டிஸ்ட்ஸ் கார்ப்பொரேஷன் கம்பெனியாரின் படங்களை வினியோகம் செய்யும். எஸ். எஸ். வாசன்தான் அதன் கர்த்தா.

### சினிமாவில் தம்பதிகள்

மற்றத் துறைகளைப்போல் சினிமாவிலும் புருஷன் மனைவி சேர்ந்து தோன்றுவது சகஜமாய்விட்டது.

அமெரிக்காவிலும் பிரிட்டனிலும் தம்பதிகள் சினிமாவில் அதிகமாகத் தோன்றுகின்றனர். எலிசபெத் பர்னர் "களவுபோன வாழ்க்கை" 'என்னிடமிருந்து தப்பாதே' என்ற பாரமௌண்ட் படங்களில் நடித்து புகழ் பெற்றுள்ளார். அவளது புருஷன் டாக்டர் பால்சிஸ்னர் ஒரு பெரிய டைரெக்டர். சார்ல்ஸ் லாப்டன் நடிகர், முதலாளி. அவரது மனைவி எல்லா லங்காஸ்டர் நடிகை. முதல் தம்பதிகள் இரு படங்களிலும் வெற்றி பெற்றுள்ளார்கள்.

ஹாலிவுட்டில் அநேக தம்பதிகள் ஸினிமாவில் புகுந்துள்ளனர்.

ஆர்தர் ஹார்ன்பிளோ அவரது மனைவி மயிரிஸா லாய், சார்லி சாப்ளினும் பாலெட் கொடார்டும், பிராங்க் சேப் மெனும் கிஸேடிஸ்வார் தௌட்டும் இன்னும்பல தம்பதிகளும் சினிமா உலகில் பிரகாசிக்கின்றனர்.

மௌனப் படங்களில் ஆலிஸ் டெர்ரியை வீக்ஸ் இங்கிராம் டைரக்ட் செய்தார். புருஷனும் மனைவியும் சினிமாவில் சேர்ந்து நடிக்கலாம் என்று அவர்தான் உலகத்துக்கே நிரூபித்தார்.

### ஹாலிவுட் செய்திகள்

தாராம்பூர் ராஜா தமது பரிவாரங்களுடன் ஹாலிவுட் சென்றுள்ளார்.

"மழை வந்தது" என்னும் படத்துக்காக ஹாலிவுட்டிலிருந்து சிலர் பரோடாவுக்கு சங்கீதம் பதிவு செய்ய வந்துள்ளார்கள்.

ஸ்னோ ஒயிட் படம் பிடித்து வெற்றியடைந்த வால்ட் டிஸ்னி 'பின்னோசியோ' என்று ஒரு படம் தயாரித்துள்ளார்.

மௌனப்பட சரிதத்தை ஹாலிவுட் படம் பிடிக்கப்போகிறது.

### லக்ஷ்மி சினிடோன் லிமிடெட்

தெலுங்கு ராதாகிருஷ்ணாவும் தமிழ் சியாமசுந்தரும் கூடிய சீக்கிரம் வெளிவரும்.

### ஸ்ரீ ராமலீலா

சென்னை ராயல் தியேட்டரில் காலம் சென்ற கன்னையாவின் சகோதரர் புத்திரர் ஸி. கிருஷ்ணய்யா "ஸ்ரீ ராமலீலா" எனும் நாடகத்தைத் தினசரி நடத்துகின்றனர். அநேகர் கண்டு பரவசம் அடைகின்றனராம்.

★

திருநீலகண்டர் கன்று காப்பாடுவார்போல் தெரிகிறது; அதற்காகத் தான் தயாராயிருக்கிறார்!

★

கண்ணழகி காஞ்சனமாலா "மகிராவண"வில் சந்திரசேனை





# மாய்ந்த நினைவு

(2ம் பக்கத் தொடர்ச்சி)

பார்க்கும் பெண்கள்முன், தான் ரெத்தினத்திடம் காலையில் பேசிக்கொண்டிருந்ததைப்பற்றித் தொடர்ந்துபேச சிறிது யோசித்தாள். ரெத்தினம் இதையறிந்துகொண்டவளாய்,

"நீங்கள் யோசிப்பது எனக்குத் தெரிகிறது. இவர்களெல்லாம் எனக்கு மிகவும் நெருங்கினவர்கள். நீங்கள் எந்த விஷயத்தைச் சொன்னாலும் கிணற்றில் போட்ட கல் மாதிரி கிடக்கும்"

எல்லோரும் முகத்தைத் தொங்க விட்டுக்கொண்டார்கள்; ரெங்கா பேசவேண்டும் என்பது அவர்களுடைய பேராவல்.

ரெங்கா மிகுந்த வருத்தத்துடன், ஆனால் சுயமதிப்பைச் சிறிதும் விட்டுக் கொடுக்காதபடி பேசலானாள்:

"நான் இலங்கைக்குப் போன மாதந்தான் வந்தேன். இந்த உலகத்தில் எனக்கு கடவுளைத் தவிர வேறு யாரும் துணையேயில்லையென்று நினைத்துக்கொண்டிருக்கிற சமயத்தில் இந்த இலங்கையிலிருந்து ஒருவர் இராமநாதபுரம் ஜில்லாவிலுள்ள கண்ணபுரம் என்ற கிராமத்துக்கு வந்திருந்தார். அவர் இங்கே இலங்கையில் ஒரு பெரிய உத்தியோகஸ்தர்....."

"அந்தப் பல்லுப்போன உத்தியோகஸ்தரை எங்களுக்கெல்லாம் தெரியும் நீங்கள் மேலே உள்ள விஷயத்தைச் சொல்லுங்கள்" என்றாள் சுப்பு.

"அதுதான் தங்கப்பல் கட்டியிருக்காரோடி" என்றாள் நாச்சாள், சிறிது புகையிலையை யெடுத்து உள்ளங்கையில் வைத்துக் கொண்டே.

ரெங்கா கூறினாள்:

"அவர் என்னைச் சந்திக்கும்போது என் பெற்றோர்கள் சம்பந்தமாக பல விபரங்களைத் தெரிவித்தார். அவ்விபரங்களிலிருந்து உத்தியோகஸ்தர் என்ற நினைவு மாறியது. எனக்கு அவரிடம் தனிப்பட்ட அன்பு என்றால் நீங்கள் உணர்ந்துகொள்வீர்கள் என்று நினைக்கின்றேன். என்னுடைய உயிரை நான் அவரிடம் ஒப்படைத்தேன். அவர் இல்லாமல் ஒரு நிமிஷம்கூட என்னால் வாழமுடியாது போலிருந்தது. அவ்வளவு பிரியம் அவர்மீது என்னையறியாமலே எனக்கு ஏற்பட்டது. நான் இலங்கைக்குஅவருடன் வந்துவிட்டேன். வந்து ஒருமாதமாக இந்தப் பங்களாவிலேயே யிருப்பது உங்களுக்கெல்லாந் தெரியும்"

"அக்கா ரெத்தினக்கா, இவர்கள் இலங்கைக்கு வந்திருப்பதைப்பற்றி இப்படி ஏதோ ஒரு வருத்தத்தோடு சொல்லுகிறார்களே, இவர்கள் இங்கே வருத்தப்பட வேண்டியதற்கு என்ன கவலையிருக்கிறது!" என்றாள் ஷண்முகம்.

வீதியிலே தமுக்கு அடிக்கிற சப்தம் கேட்டு, சுப்பு மாடுபோல விழுந்தடித்து ஓடினாள். தமுக்கு அடிப்பவன் கையிலே ஒரு கத்தை நோட்டீசும் வைத்துக்கொண்டிருந்தான். வழியில் போவார்க்கும் வருவார்க்கும், வீட்டு வாசல்களில் உள்ளவர்க்கும் அந் நோட்டீசைக் கொடுத்துக்கொண்டு வந்தான்.

சுப்பு ஒரு நோட்டீசை வாங்கிக் கொண்டு உரக்கப்படித்துக்கொண்டே உள்ளே நுழைந்தாள்:

**நோட்டீஸ்! நோட்டீஸ்!!**

**நாளை வெள்ளிக்கிழமை மாலை 5 மணிக்குக் கம்பளை ரஸ்தாவிலுள்ள ஸ்ரீமதி ரெங்காவின் பங்களாவுக்கு எதிரில் ஒரு பொதுக் கூட்டம் நடைபெறும்.**

**ஸ்ரீமான் கணபதி பி. ஏ. 'தற்கால அரசியல் தலைவர்கள் போக்கு' என்பதுபற்றிப் பேசுவார்.**

**அனைவரும் வருக!**

என்று படித்து முடித்தாள். உட்கார்ந்திருந்த ரெங்கா விதிர்ட்டெழுவதுபோல எழுந்து அந் நோட்டீசை சுப்புவின் கையிலிருந்து வெடுக்கென்று பிடுங்கி 3 நிமிஷ நேரம் பார்த்தாள். அதற்குள் அவள் குறைந்தது நான்கு முறைகளாவது அதைப் படித்திருப்பாள். அவள் கண்களிலிருந்து கண்ணீர் கடகடவென்று வடிந்தது. எல்லோரும் ஆச்சரியத்தோடு ரெங்காவை உற்றுக் கவனித்தார்கள்.

"நான் போய் வருகிறேன்" என்று அவள் சொன்ன குரல் நெஞ்சை யடைத்துக் கொண்டு வந்தது. அவளுடைய ஆத்திரம் நிறைந்த நோத்தில் அவர்கள் குறுக்கிட விரும்பவில்லை.

(தொடரும்)

# ரயில் வண்டிகளின் போக்குவரத்து கால விபரம்

### திருச்சியிலிருந்து—மானாமதுரைக்கு

| ஸ்டேஷன்கள். | | 25 வி. பாஸ்ட் பாஸஞ்சர். | 1 வி. இண்டோ சிலோன் எக். | 67 வி. பாஸஞ்சர். | * 33 வி. பாஸஞ்சர். | * 29 வி. பாஸஞ்சர். | 31 வி. பாஸஞ்சர். | 7 வி. தனுஷ் பாஸ்ட் பாஸஞ் |
|---|---|---|---|---|---|---|---|---|
| திருச்சிராப்பள்ளி .. | | 3-57 | 7-30 | 10-40 | | 13-20 | 17-27 | 22-15 |
| புதுக்கோட்டை | வரு | 5- | 8-33 | 12-3 | | 14-35 | 18-54 | 23-36 |
| | புற | 5-6 | 8-41 | 12-9 | | 14-42 | 19-0 | 23-42 |
| நமனசமுத்திரம் ... | | 5-17 | 8-52 | 12-19 | | 15-0 | 19-11 | - - |
| திருமயம் ... | | 5-31 | 9-8 | 12-32 | | 15-13 | 19-25 | 0-5 |
| செட்டிநாடு ... | | 5-45 | 9-24 | 12-46 | | 15-27 | 19-39 | 0-21 |
| கோட்டையூர் ... | | 5-55 | 9-34 | 12-55 | | 15-36 | 19-49 | 0-31 |
| காரைக்குடி | வரு | 6-9 | 9-50 | 13-12 | | 15-53 | 20-6 | 0-46 |
| | புற | 6-15 | 10-1 | | 14-27 | 16-39 | 20-35 | 0.57 |
| தேவகோட்டை ரஸ்தா | | 6-25 | 10-9 | | 14-35 | 16-47 | 20-43 | - - |
| கல்லல் ... | | 6-42 | 10-26 | | 14-52 | 17-4 | 21-0 | 1-23 |
| அரண்மனை சிறுவயல் | | 6-50 | - - | | 14-58 | 17-10 | - - | - - |
| நடராஜபுரம் ... | | 7-0 | - - | | 15-8 | 17-20 | 21-12 | 1-37 |
| நாட்டரசன்கோட்டை | | 7-13 | 10-48 | | 15-21 | 17-33 | 21.25 | 1-52 |
| சிவகெங்கை ... | | 7-25 | 10-59 | | 15-42 | 17-52 | 21-36 | 2-4 |
| மானாமதுரை ... | | 8-2 | 11-30 | | 16-14 | 18-24 | 22-5 | 2-33 |

* இக்குறியிட்ட வண்டிகள் நேரே மதுரைக்குச் செல்லுவன.

### மானாமதுரையிலிருந்து—திருச்சிக்கு

| ஸ்டேஷன்கள். | | 32 வி. பாஸஞ்சர் | * 68 வி. பாஸஞ்சர் | 30 வி. பாஸஞ்சர். | 2 வி. இண்டோ சிலோன் எக் | 34 வி. பாஸஞ்சர். | 26 வி. பாஸ்ட் பாஸஞ்சர். | 8 வி. தனுஷ் பாஸ்ட்பாஸ |
|---|---|---|---|---|---|---|---|---|
| மானாமதுரை ... | | | 8-14 | 12-15 | 1513 | 17-18 | 18-55 | 23-17 |
| சிவகெங்கை ... | | | 8-49 | 12-51 | 15-41 | 17-53 | 19-29 | 23-49 |
| நாட்டரசன்கோட்டை | | | 9-0 | 13-2 | 15-52 | 18-4 | 19-40 | 0-1 |
| நடராஜபுரம் ... | | | 9-12 | 13-15 | - - | 18-16 | 19-52 | 0-15 |
| அரண்மனை சிறுவயல் | | | 9-22 | 13-25 | - - | 18-27 | - - | - - |
| கல்லல் ... | | | 9-29 | 13-32 | 16-13 | 18-33 | 20-4 | 0-30 |
| தேவகோட்டை ரஸ்தா | | | 9-46 | 13-49 | 16-30 | 18-50 | 20-21 | - - |
| காரைக்குடி | வரு | | 9-53 | 13-56 | 16-37 | 18-57 | 20-28 | 0-54 |
| | புற | 6-50 | 10-3 | 14-6 | 16-47 | | 20-38 | 1-4 |
| கோட்டையூர் ... | | 7-0 | 10-13 | 14-17 | 16-57 | | 20-49 | 1-15 |
| செட்டிநாடு ... | | 7-10 | 10-22 | 14-27 | 17-7 | | 20-59 | 1-26 |
| திருமயம் ... | | 7-24 | 10-35 | 14-41 | 17-20 | | 21-13 | 1-42 |
| நமன சமுத்திரம் ... | | 7-38 | 10-48 | 14-58 | 17-33 | | 21-27 | - - |
| புதுக்கோட்டை | வரு | 7-47 | 10-57 | 15-7 | 17-44 | | 21-41 | 2-4 |
| | புற | 7-53 | 11-3 | 15-13 | 17-50 | | 21-49 | 2-10 |
| திருச்சிராப்பள்ளி ... | | 9-32 | 12-30 | 16-42 | 19-0 | | 22 58 | 4-32 |

* இக்குறியிட்ட வண்டி மதுரையிலிருந்து நேரே வருவது.

### பஞ்சாங்கம்

| பர்மா. | இங் | தமிழ். | வாரம். | பிரமாதி-௵ இங்-1939. பர்மா-1301. |
|---|---|---|---|---|
| உவாக்காம் லாசான் | ஆகஸ்ட்-மீ | பிரமாதி-௵ ஆவணி-மீ | | |
| 3 | 17 | 1 | வியா | திரு-53-12. பூரம்-10-15. சித்த யோகம். |
| 4 | 18 | 2 | வெள் | சது-47-59. உத்தி-6-35. சித்தாமிருதயோகம் |
| 5 | 19 | 3 | சனி | பஞ்-43-27. அஸ்-3-26. மரணயோகம். |
| 6 | 20 | 4 | ஞாயி | ஷஷ்-39-42. சித்-0-59. சித்த யோகம். |
| 7 | 21 | 5 | திங் | ஸப்.36-56. விசா-58-50. மரணயோகம். |
| 8 | 22 | 6 | செவ் | அஷ்-35-17. அனு-59-25. சித்தயோகம். |
| 9 | 23 | 7 | புதன் | நவ-34-52. கே-60-0. சித்தயோகம். |
| 10 | 24 | 8 | வியா | தச-35-44. கே-1-16. சித்தயோகம். |

### நடப்பு வட்டி விகிதங்கள்

| மாதம். | நாள். | சென்னை | ரெங்கூன் | பினங்கு | சிங்கப்பூர் | செய்கோன் |
|---|---|---|---|---|---|---|
| வெகுதானிய | | | | | | |
| ஆடி | 32 | 0 6 3 | 0 4 0 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| ஆவணி | 31 | 0 6 3 | 0 4 0 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| புரட்டாசி | 30 | 0 6 3 | 0 4 0 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| அற்பசி | 30 | 0 6 3 | 0 4 0 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| கார்திகை | 30 | 0 6 3 | 0 4 0 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| மார்கழி | 29 | 0 6 0 | 0 4 6 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| தை | 29 | 0 6 6 | 0 4 9 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| மாசி | 30 | 0 6 6 | 0 4 0 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| பங்குனி | 31 | 0 6 9 | 0 5 0 | 0 4 6 | 0 4 3 | 0 4 0 |
| பிரமாதி சித்திரை | 31 | 0 6 6 | 0 5 6 | 0 4 6 | 0 4 3 | 0 4 0 |
| வைகாசி | 31 | 0 6 6 | 0 4 0 | 0 4 3 | 0 4 3 | 0 4 0 |
| ஆனி | 32 | 0 6 3 | 0 4 0 | 0 4 3 | 0 4 3 | 0 4 0 |

RGE NO.M. 3888 | 16 PAGES | PRICE 1 ANNA

SUBSCRIPTIONS
Inland Annual ... Rs. 5
Burma Annual ... Rs. 6
Foreign Annual ... Rs. 7

# ஊழியன்

ADVERTISEMENTS
One Inch S. C. per insertion As. 8
Court Notice per Inch Re. 1
Long Standing Advertisements given Concessions

The "Oolian", A Nationalist Tamil Weekly

VOL. 19 | KARAIKUDI, 17TH AUGUST 1939, THURSDAY | NO. 7



Edited, Printed and Published by Raya Chockalingan for The India Publications Ltd., at the Oolian Power Press, Karaikudi.

